# கமல வாசகம்

## நான்காம் புத்தகம்

ஆசிரியர்கள் :

**வித்துவான் ரா. விசுவநாதன்,** எம்.ஏ., பி.ஓ.எல்.
முன்னாள் தமிழ்ப் பேராசிரியர்,
மாகாண அரசினர் கல்லூரி, சென்னை.

&

**பண்டிதர் செ. முத்துரத்தின முதலியார்,**
முன்னாள் தலைமைத் தமிழ்ப் பண்டிதர்,
அரசினர் உயர்தரக் கலாசாலை, திருவாரூர்.



பதிப்பாசிரியர் :
புலவர் பு. செல்வராசனார்
தலைமைத் தமிழாசிரியர்,
C. A. H. இந்து முஸ்லிம் உயர்நிலைப் பள்ளி, சென்னை-1.




**விவேகானந்தா பதிப்பகம்**
விஜயபுரம் :: திருவாரூர் ஜங்ஷன்

பதிப்புரிமை] 1956 [விலை 8 அணா

| | |
|---|---|
| முதற் பதிப்பு | 1951. |
| இரண்டாம் பதிப்பு | 1952. |
| மூன்றும் பதிப்பு | 1955. |
| திருத்திய நான்காம் பதிப்பு | 1956. |

Printed in Dauble crown 24 lbs white
printing glaze paper.

Approved by the Text Book Committee, Madras.
Vide Fort St. George Gazette Part I-B, Page 32
Dated 17th May 1952.



Printed at Rajan Electric Press, Madras-1.

# முகவுரை

நான்காம் வகுப்புக்குரிய, இப்புத்தகம் பாடங்களின் பொருள்கள், அவற்றைக் கைக்கொள்ளும் முறை, நடை, மொழியறிவு முதலியவற்றில் மூன்றும் புத்தகத்தைவிட ஒரு படி முன்னேறியுள்ளது. அரசியலார் அமைத்துள்ள பாடத்திட்டத்தின்படி, திட்டமான முதலும் முடிவுமுள்ள நிகழ்ச்சிக் கதைகளும், ஆழ்ந்த கருத்துக்களைப் புலப் படுத்தும் சொல்லமைதிகளும், அழகுணர்ச்சி, சிந்தனை, கருத்து வளர்ச்சி இவற்றிற்குதவும் செய்திகளும் இலக்கியச் சுவையை ஊட்டும் வரலாறுகளும் இப்புத்தகத்தில் அமைந் துள்ளன, பேச்சு, எழுத்து, கட்டுரையாக்கம், இலக்கணம் ஆகியவை பாடத்திட்டத்திற் கண்டவாறு வளர்ச்சியுறுதற் குரிய வண்ணம் ஒவ்வொரு பாடத்தின் கீழும் பயிற்சிகள் தரப் பெற்றுள்ளன. ஏறக்குறைய 700 புதிய சொற்கள் இதனில் கையாளப் பெற்றிருப்பதைக் காணலாம்.

பேச்சு, எழுத்து இவற்றின் நோக்கம் தெளிவு விளக்கம், இனிமை ஆகிய முறைகளில் ஒருவர் தம் கருத் தைப் பிறர்க்குத் தெரிவித்தலாகும், இதற்குக் கருத்து வளமும் கூடவே இருத்தல் வேண்டும். ஆகவே பாடப் புத்தகங்களைக் கையாளும் ஆசிரியர்கள் தாம் எடுத்துக் கொள்ளும் பாடத்தை யொட்டிப் பிள்ளைகள் கருத்தை வளர்க்கக் கூடிய முறைகளைக் கையாள்வது இன்றியமை யாதது. இதற்குரிய வழி பிள்ளைகளைப் பேசவைப்பதே. இப்பேச்சுக்களின் போக்கைக் குறிக்கவே பயிற்சிகளின் கீழ்க் கட்டுரை என்ற தலைப்புக் கொடுக்கப் பெற்றிருக்கிறது. அத்தலைப்பின் கீழே காணப் பெற்றவற்றை மேற்கோளாகக் கொண்டு வேறு தலைப்புகளையும் எடுத்துப் பிள்ளைகளைப் பேசச் செய்வது நாம் கொண்ட குறிக்கோளை அடைவதற்கு ஒரு வாயிலாகும்.

இப்புத்தகம் மாணவ உலகத்திற்கு நன்கு பயன்பட அருளவேண்டுமென்று எல்லாம் வல்ல இறைவனை இறைஞ்சுகிறோம்.

விஜயபுரம்,
19-10-1956.

பதிப்பகத்தார்

# பொருளடக்கம்


| எண் | பொருள் | | பக்கம் |
|---|---|---|---|
| 1. | தாயின் மணிக்கொடி | ... | 1 |
| 2. | குமரி முனை | ... | 3 |
| 3. | கங்கை | ... | 8 |
| 4. | முதற் பரிசு | ... | 13 |
| 5. | முருகன் பாடுகிறான் | ... | 18 |
| 6. | அசோகர் | ... | 21 |
| 7. | முகவரி எழுதுதல் | ... | 26 |
| 8. | சொறித் தவளை | ... | 31 |
| 9. | உயிரினும் மானமே பெரியது | ... | 35 |
| 10. | நன்றி கொன்ற மாது | ... | 42 |
| 11. | அமெரிக்காவைக் கண்டது | ... | 47 |
| 12. | தேசிங்கு மன்னன் | ... | 52 |
| 13. | விடுகதைகள் | ... | 56 |
| 14. | கடிதங்கள் | ... | 58 |
| 15. | மழைத்துளி சொன்ன கதை | ... | 63 |
| 16. | அரசாட்சி எளிதோ ? | ... | 69 |
| 17. | அழுக்குச் சுப்பன் | ... | 75 |
| 18. | பனைமரம் | ... | 81 |
| 19. | வள்ளல் அதியமான் | ... | 84 |
| 20. | குருவியும் யானையும் | ... | 91 |
| 21. | செய்யுட்பகுதி | ... | 96 |

## தேசீய கீதம்

---

ஜன கண மன அதிநாயக ஜயஹே
பாரத பாக்ய விதாதா

பஞ்சாப ஸிந்து குஜராத மராட்டா
த்ராவிட உத்கல வங்கா
விந்திய ஹிமாசல யமுனா கங்கா
உச்சல ஜலதி தரங்கா

தவசுப நாமே ஜாகே
தவசுப ஆசிஷ மாங்கே

காயே தவ ஜய காதா

ஜன கண மங்கள தாயக ஜயஹே
பாரத பாக்ய விதாதா

ஜயஹே ஜயஹே ஜயஹே
ஜய ஜய ஜய ஜயஹே.

# நாட்டு வணக்கம்

இந்தியாவின் சுகதுக்கங்களை நிர்ணயிக்கிற நீதான்
மக்கள் எல்லாருடைய மனத்திலும் ஆட்சி
செலுத்துகிறாய்.
நின் திருநாமம், பஞ்சாப்பையும் சிந்துவையும்
குஜராத்தையும் மஹாராஷ்டிரத்தையும்
திராவிடத்தையும் ஒரிஸாவையும் வங்காளத்தையும்
உள்ளக்கிளர்ச்சி யடையச் செய்கிறது.
அது விந்திய ஹிமாலய மலைகளில் எதிரொலிக்கிறது;
யமுனை, கங்கை நதிகளின் இன்ப நாதத்தில்
கலக்கிறது;
இந்தியக் கடல் அலைகளால் ஜபிக்கப்படுகிறது.
அவை நின் ஆசியை வேண்டுகின்றன;
நின் புகழைப் பாடுகின்றன ;
இந்தியாவின் சுகதுக்கங்களை நிர்ணயிக்கிற உனக்கு
வெற்றி, வெற்றி, வெற்றி.



## 1. தாயின் மணிக்கொடி

தாயின் மணிக்கொடி பாரீர்—அதைத்
தாழ்ந்து பணிந்து புகழ்ந்திட வாரீர்.
(தாயின்)

ஓங்கி வளர்ந்ததோர் கம்பம்—அதன்
உச்சியில் முந்நிறக் கொடியினில் சக்கரம்
பாங்கின் எழுதித் திகழும்—செய்ய
பட்டொளி வீசிப்பறந்தது பாரீர்
(தாயின்)

கம்பத்தின் கீழ்நிற்றல் காணீர்—எங்கும்
காணரும் வீரர் பெருந்திருக் கூட்டம்
நம்பற் குரியர் அவ்வீரர்—தங்கள்
நல்லுயிர் ஈந்தும் கொடியினைக் காப்பர்
(தாயின்)

சேர்ந்ததைக் காப்பது காணீர்—அவர்
சிந்தையின் வீரம் நிரந்தரம் வாழ்க!
தேர்ந்தவர் போற்றும் பரத—நிலத்
தேவி துவஜம் சிறப்புற வாழ்க !
(தாயின்)

—சி. சுப்பிரமணிய பாரதியார்

| | | |
|---|---|---|
| கம்பம் | திகழும் | சிந்தை |
| பரதநிலத்தேவி | உச்சி | நல்லுயிர் |
| வீரம் | துவஜம் | மூந்நிறம் |
| ஈந்து | நிரந்தரம் | சிறப்புற |

கட்டுரை

1. இந்தியக் கொடியின் தோற்றத்தைப் பற்றிச் சில வாக்கியங்கள் எழுது.

2. நீ பார்த்த ஏதேனும் ஒரு கொடியேற்று விழாவைக் குறித்து உன் நண்பனுக்கு ஒரு கடிதம் எழுது.

---

# 2. குமரி முனை




வடக்கே இமயமும், தெற்கே குமரியும் எல்லையாகக் கொண்டது நமது பாரதநாடு. 'வட வேங்கடம் தென் குமரி' என்று தமிழகத்திற்கு இரண்டு எல்லைகள் கூறுவது வழக்கம். குமரி என்பது இன்று முப்பக்கங்களிலும் நீர் சூழ்ந்த ஒரு முனையாக விளங்குகிறது. இந்தியாவுக்குக் கிழக்கிலும் மேற்கிலும் இரு கடல்களும், தெற்கில் மாகடலும் உள்ளன என்பதை நீ அறிவாய். இரு கடல்களும் குமரி முனையில் மாகடலோடு ஒன்று கூடுகின்றன.

குமரி முனைக்கப்பால் இந்தியாவின் நிலப்பகுதியே இல்லை. இத்தகைய இடம்

பார்ப்பதற்கு மிக அழகானது. இயற்கைக் காட்சியைக் கண்டு களிக்க, இந்தியர்களும் பிற நாட்டு மக்களும் இங்கு வந்து போய்க் கொண்டே இருக்கிருர்கள்.

குமரி முனைக்குத் திருவனந்தபுரத்தி லிருந்து பஸ் வழியே போகலாம். திருவாங் கூரின் தலைநகரம் திருவனந்தபுரம் என்பது. இது சென்னையிலிருந்து 512 மைல் தொலை வில் இருக்கிறது. இன்றிரவு சென்னையி லிருந்து புறப்பட்டால் நாளை இரவு அங்கே 'மெயில்' வண்டி போய்ச் சேரும். திருவனந்த புரத்தில் நாம் பதுமநாபர் கோவில், ஓவி யக் காட்சிச் சாலை, மீன் காட்சிச் சாலை, விலங்குக் காட்சிச் சாலை முதலியவற்றைக் காணலாம்.

திருவனந்தபுரத்திலிருந்து பஸ் வழி யாகக் குமரிக்குப் போகும் வழியில் நாகர் கோவில், சுசீந்திரம் என்னும் இடங்களைக் கடந்து செல்லவேண்டும். நாகர்கோவிலுக்கு அருகில் உள்ள புத்தேரி என்னும் சிற்றூர் தமிழ்ப் பெருங் கவிஞர் தேசிக விநாயகம் பிள்ளை அவர்கள் வாழ்ந்த இடமாகும். அவர்கள் எழுதிய பாடல்கள் சிலவற்றைப் படித்திருக்கிறீர்கள். சுசீந்திரத்தில் சிற்ப வேலைகள் செறிந்த கோவில் ஒன்று உண்டு.

குமரி முனை நாகர்கோவிலுக்குத் தெற்கே பன்னிரண்டு மைல் தொலைவில் இருக்கிறது. அவ்வூர் மிகச்சிறியது. ஆனால், அங்கே தங்கு வதற்கு வசதியான இடங்கள் இருக்கின்றன. முனையில் கன்னிகா பரமேசுவரி அம்மன் கோவில் கொண்டிருக்கிறார். அக்கோவிலை ஒட்டிக் கடல்கள் முப்புறங்களிலும் இருக் கின்றன. அங்கே மக்கள் நின்று பார்க்கவும் கடலில் நீராடவும் இடங்கள் இருக்கின்றன. கடலில் கரைக்கு அருகில் சில கற்பாறைகள் நீர் மட்டத்திற்கு மேலே ஓங்கி நிற்கின்றன.

அங்கே நின்றுகொண்டு நாம் நம்மைச் சூழப் பெருங்கடல்கள் பரந்து கிடப்பதைக் காண்கிறோம். இயற்கையின் பெருமைகள் எல்லாம் அங்கே விளங்குகின்றன. அவ் வியற்கையை ஆளும் தெய்வமாக அம்மன் அங்கே கோவில் கொண்டிருக்கிறார்.

அந்த இடத்தில் நின்றுகொண்டு காலை யில் கதிரவன் தோன்றுவதையும் மாலையில் மறைவதையும் காணலாம். பௌர்ணமி யில் கிழக்கே சந்திரன் தோன்றுவதையும் மேற்கே சூரியன் மறைவதையும் நோக்கும் போது, நிலமகளுக்கு அவ்விரண்டும் இரண்டு குண்டலங்களாக விளங்கு கின்றனவோ என்று தோன்றும்.

அவ்விடங்களை விட்டு மணற்கரை யோடு சென்றால் விதவிதமான நிறங்கள் உள்ள மணல்களின் உருவங்கள் அரிசி போலும், பருப்புப் போலும், கடுகு போலும் காணப்படுவது விந்தையிலும் விந்தை.

இவ்வாறு எழில் நலம் விளங்கும் இடங் கள் நம் நாட்டில் வேறு பல உண்டு. அவை நமக்குக் கிடைத்துள்ள அழியாச் செல்வங்கள். நம்மால் முடிந்தவரை நாம் அவற்றைக் கண்டு அவற்றின் அழகை உணர முயல வேண்டும்.

| | | |
|---|---|---|
| இமயம் | களிக்க | எழில் |
| குமரி | இயற்கை | பௌர்ணமி |
| வேங்கடம் | முனை | குண்டலங்கள் |

பயிற்சி

I. விடை எழுது :—

1. தமிழகத்தின் வடக்கு, தெற்கு எல்லைகள் யாவை ?

2. குமரிமுனை எங்கே இருக்கிறது ?

3. திருவனந்தபுரத்தில் நாம் பார்க்கக்கூடி யவை யாவை ?

4. அங்கே நாம் காணக்கூடிய காட்சிகள் யாவை ?

5. அங்கே உள்ள தெய்வத்துக்குப் பெயர் யாது ?

II. பொருள் வேற்றுமை கூறு :— அழகு—அலகு, நடு—நாடு, பாறை—பாரை, காளை—காலை.

III. நிலமகள் என்பது போல மகள் என்று முடியும் வேறு சொற்கள் கூறு.

IV. காட்சிச்சாலை, கற்பாறை, நிலமகள், வித விதமான, எழில் நலம்—இவற்றைச் சொந்த வாக்கியங்களில் பயன்படுத்து.

V. இலக்கணம்

1. இப்பாடத்தில் வந்துள்ள இடப் பெயர்களைப் பொறுக்கி எழுது.

2. இப்பாடத்திலிருந்து மூன்று காலங்களையும் காட்ட மூன்று வினைச் சொற்கள் எடுத்துக் காட்டு.

VI. கட்டுரை

உன் ஊரிலிருந்து கன்னியா குமரிக்குப் போகும் வழி யாது? வழியில் நீ காணும் ஊர்களைச் சொல்லு.

---

# 3. கங்கை




இமயம் நம் பாரத நாட்டின் வடக்கு எல்லையைப் பெரும் சுவர்போல் காத்துக் கொண்டிருக்கிறது அல்லவா? வானை அளாவும் மலை உச்சிகளும், பாதாளம் வரை செல்லும் பள்ளங்களும், மனிதர் புகமுடியாத காடுகளும் அம்மலைப் பகுதியில் பல உண்டு.

அம்மலைக்கு இமவான் என்ற ஓர் அரசன் இருந்தான். அவனுக்கு மேனை என்ற மனைவியும் கங்கை என்ற மகளும் இருந்தார்கள். கங்கை மிக அழகு வாய்ந்தவள்; அழகுக்கு ஏற்ற குணமும் அவளிடம் இருந்தது. இமவான் இமயமலைக்கு மன்னனாக இருந்தாலும் பாரத நாட்டின் நலத்தில் கண்ணும் கருத்துமாய் இருந்தான்.

ஒரு காலத்தில் பாரத நாட்டின் வடக்குப் பகுதியில் கொடிய பஞ்சம் ஒன்று உண்டாயிற்று. பல ஆண்டுகள் அங்கே மழையே பொழியவில்லை. புல் பூண்டுகள் எல்லாம் கரிந்து போயின. மக்கள் எல்லாரும் வாட்டம் அடைந்தனர். அக்காலத்தில் நம் நாட்டைப் பகீரதன் என்னும் மன்னன் அரசாண்டு வந்தான். மக்கள் படும் துயரைக் கண்டு அவன் மனம் வருந்தினன்.

அவனுக்கு வசிட்டர் என்ற ஓர் ஆசிரியர் இருந்தார்; அவர் பகீரதனை நோக்கி, "மன்ன, நீ கங்கையை இங்கே வரும்படி செய்தால் உலகம் பிழைக்கும்" என்றார். அதற்குப் பகீரதன் உடன்பட்டு, அரிதில் முயன்று, இமயத்தில் ஏறி இமவானைக் கண்டான். அவன் இமவானை நோக்கி நாட்டின் துன்ப நிலையைக் கூறினன். இமவானுக்குத் தன் மகளை விட்டுப் பிரிய மனமில்லை. கங்கையும் தன் பெற்றோர்களையும், தான் பழகிய இடங்களையும் விட்டுச் செல்ல முதலில் உடன்படவில்லை.

ஆனல், பகீரதன் தன் குடிகள்படும் துயரங்களைக் கூறியபோது அவள் கண்களி

லிருந்து நீர் பெருகிற்று. அதுவே வாய்க் காலாகி, சிற்ருருகி, பேராருகி ஓடத்தொடங் கிற்று. வரவரக் கங்கையே நீராக உருகிவிட் டாள். அவள் தெய்வமகள். ஆதலால் அவளுக்கு அழிவே இல்லே. அரசன் ஆற்றின் முன்னே தன் தேரைச் செலுத்திக் கொண்டு தன் நாட்டுக்கு அவளே அழைத் துச் சென்ருன். கங்கையின் கருணேயே கண்ணீராகி, ஆருகப் பெருகியதால் அவ் வெள்ளத்திற்குக் கங்கை என்றே அரசன் பெயர் இட்டான். பாரதநாட்டில் கங்கை புகுந்தவுடன் நாடு செழிப்புற்றது. புல்பூண்டு களும் செடிகொடிகளும் மரங்களும் வளர்ந்து ஓங்கின. மக்கள் மகிழ்ச்சி பொங்கி ஆற்று நீரைக் கொண்டு ஏரிகளேயும் குளங்களேயும் நிரப்பி, வயல்களில் நெல் முதலிய பயிர்களே வளர்த்தனர். நாட்டில் செல்வம் மலிந்தது. நகரங்களும் ஊர்களும் எண்ணிக்கை இல்லா மல் தோன்றின. இவ்வாறு கங்கா தேவியின் அருளால் நாடு நாடாயிற்று.

மக்கள் எல்லாரும் கங்கையை வணங்கி எப்பொழுதும் வற்ருமல் ஓடிக் கொண்டே இருக்க வேண்டும் என்று கேட் டுக்கொண்டார்கள். அதற்குக் கங்காதேவி யும் இசைந்தனள். அவ்வாறே இன்னும்

கங்கை என்றும் நீர் அருமல் ஓடிக்கொண்டு இந்நாட்டிற்கு உயிராய் விளங்கி வருகின்றது.

| | | |
|---|---|---|
| எல்லே | அளாவு | புக |
| சுவர் | உச்சி | வாய்ந்தவள் |
| உயரம் | பாதாளம் | ஏற்ற |
| அகலம் | வரை | பஞ்சம் |
| ஆழம் | பள்ளம் | பொழி |
| வாட்டம் | ஆசிரியர் | உடன்படு |
| முயன்று | வாய்க்கால் | சிற்ருறு |
| பேராறு | கருணே | மலிந்தது |

பயிற்சி

I. விடை எழுது:—

1. இந்தியாவின் நான்கு எல்லேகளும் யாவை ?

2. இமயமலேயின் பெருமைகளேச் சில வாக்கியங்களில் சொல்லு.

3. இமவான் யார்? அவன் மனேவி, மகளின் பெயர்கள் யாவை ?

4. பஞ்சத்தால் விளேந்த தீமைகள் யாவை?

5. வசிட்டர் பகீரதனிடம் கூறியவை யாவை?

6. பகீரதன் கங்கையை வேண்டிக்கொண்டது என்ன ?

7. ஆறு எப்படிப் பெருகிற்று ?

8. கங்கையால் நாடு அடைந்த நன்மைகள் யாவை?

II. கண்ணும் கருத்துமாய், புல்பூண்டு, எண்ணிக்கை இல்லாமல், நீர்பெருகுதல், நீர் அறுதல்—இவற்றைச் சொந்த வாக்கியங்களில் பயன்படுத்து.

III. உச்சரி; பொருள் கூறு:—

மழை-மலே, வெள்ளம்-வெல்லம், ஏரி-ஏறி, குளம்-குலம்.

IV. எதிர்ப்பதங்கள் கூறு:-இன்பம், மலிந்தது.

V. இலக்கணம்

1. பகீரதன் இமவானைக் கண்டான் —

இந்த வாக்கியத்தில் பகீரதன் என்னும் சொல் செயல் செய்பவனைக் குறிக்கும். இது எழுவாய்.

எழுவாய் செய்த செயலைக் குறிக்கும் சொல் கண்டான் என்பது. இது பயனிலை.

2. பின் வரும் வாக்கியங்களில் எழுவாய், பயனிலைகளைக் காட்டு:—

(1) கண்களிலிருந்து நீர் பெருகிற்று.

(2) பகீரதன் ஆற்றை அழைத்துச் சென்ருன்.

(3) நகரங்களும் ஊர்களும் தோன்றின.

VI. கட்டுரை

இவ்வூரில் பஞ்சம் உண்டாகியிருப்பதாக எண்ணிக்கொள். அதனல் விளையும் தீமைகளைப் பற்றிச் சொல்லு.

# 4. முதற் பரிசு




ஒரு காலத்தில் ஒரு நாட்டு மன்னன் தன் நாடெங்கும் பின்வருமாறு பறையறையச் செய்தான்: "நாட்டுக்குச் சிறந்த உதவி செய்த ஒருவருக்கு வருகிற பொங்கல் அன்று, சிறந்த பரிசு அளிக்கக் கருதி இருக்கிறோம்; இப்பரிசுபெற விரும்புவோர் அன்று நம்மை வந்து கண்டு கொள்ளலாம்."

பொங்கல் நாள் வந்தது. அரசன் தன் அத்தாணி மண்டபத்தில் வீற்றிருந்தான். அவையினர் அரசன்முன் தத்தமக்கு உரிய இடங்களில் அமர்ந்து இருந்தனர். வாயிலில் முரசு முழங்கிற்று. பரிசுக்கு உரியவர்கள் என மூவர் அங்கே வந்திருந்தனர். அவர்கள் தாம் தாம் செய்த பெரிய செயல்களைக்

குறித்து எழுதி அமைச்சனிடம் கொடுத்தார்கள். அமைச்சன் அவற்றைப் படித்துவிட்டு, அவர்களை ஒவ்வொருவராக மன்னனுக்கு அறிமுகப்படுத்தினன்.

அவன் ஒருவரைச் சுட்டி, "மன்ன, இவர் குமணர் என்ற பெயரினர். இவருடைய ஊரில் குடிதண்ணீர்க்கு வழி இல்லாமல் மக்கள் தவித்து வந்தார்கள். இவர் தம் செலவில் இரண்டு குளங்களையும் நான்கு கிணறுகளையும் வெட்டினர். இன்று அவ்வூரில் நீர்ப் பஞ்சமே இல்லை. இவர் தாம் செய்த உதவியே மிகப் பெரியது எனக் கருதுகிறார்" என்றான்.

அரசன், 'அவருக்கு ஓர் இடம் கொடுக்க' என்றான்.

அமைச்சன் அடுத்தவரை அழைத்து அரசனுக்குக் காட்டி, "இறைவ, இவர் வாணன் என்பவர். இவர் பண்டைப் பயிர் முறைகளிலுள்ள குற்றங்களை யெல்லாம் கண்டு, அவற்றை நீக்கிப் புதிய பயிர்முறைகளை மக்களுக்குக் கற்பித்தார். இவருடைய உதவியால் இவருடைய ஊரில் விளைபொருள்கள் முன்னைவிட ஐம்மடங்கு பெருகின. இவர் தாமே பரிசுக்கு உரியவர் என்று எண்ணுகிறார்" என்றான்.

அரசர் அவருக்கும் மற்ருேர் இடத்தைக் காட்டி அதனில் அமரச்செய்தான்.

அதன்மேல் அமைச்சன் மூன்ருமவரை அழைத்து முன்நிறுத்தி அரசரை நோக்கி, “இறைவ, இவர் சிறந்த புலவர். இவர் பெயர் கபிலர். பல மொழிகளேயும் கலேகளே யும் இவர் தம் ஊர் மக்களுக்கெல்லாம் நன் ருகக் கற்பித்திருக்கிருர். தம்முடைய உதவியே பெரியதென்பது இவருடைய எண்ணம்” என்ருன்.

அரசன் அவருக்கும் ஓர் இடத்தைக் காட்டி உட்காரச் செய்தான். பிறகு அவன் அவையோர்களேப் பார்த்துப் பின்வருமாறு பேசத் தொடங்கிஞன் :—

“அவையோர்களே, நாட்டு மக்களே, இன்று நம் முன் வந்த மூவரும் உண்மையில் நாட்டுக்கு உதவி செய்தவர்களே. தண் ணீர், உணவு, கல்வி இம்மூன்றும் இல்லாத நாடு நாடே அன்று. இவர்களுக்கு நான் நன்றி உடையவஞய் இருக்கிறேன். இவர் களுக்குப் பரிசுகளே நான் கொடுக்கப் போகிறேன்.

ஆஞல், நாட்டுக்கு இணையற்ற உதவி செய்துவரும் ஒருவரை நான் அறிவேன்.நான்

நாடு சுற்றிவருவதற்குக் கடந்த மாதம் சென்றிருந்தபோது, ஒரு சிற்றூரில் சில நாழிகை நேரம் தங்க நேர்ந்தது. அங்கே ஒரு குடிசையில் ஒரு கணவனும் அவன் மனைவியும் ஐந்து பிள்ளைகளை வளர்த்து வருவதைக் கண்டேன். அப்பிள்ளைகளின் உடல் பொலிவும், ஒழுக்கமும், உழைப்பும், அன்பும், அடக்கமும் என் மனத்தைக் கொள்ளை கொண்டன. அப்பிள்ளைகள் பெரியவர்கள் ஆகும்போது நாட்டின் சிறந்த மக்களாக விளங்குவார்கள் என்பது திண்ணம். இவர்களே நாட்டின் செல்வம். இத்தகைய மக்களை வளர்ப்பவர்களே உலகுக்குப் பேருதவி செய்பவர் ஆவர். இன்று அவர்கள் வரவில்லை. என்றாலும் அவர்களே முதற் பரிசுக்கு உரியவர் ஆவர்'' என்று கூறினான். அவையோர் யாவரும் மகிழ்ந்தனர்.

| | | |
|---|---|---|
| பரிசு | வீற்றிருந்தான் | பண்டை |
| அத்தாணி | அமைச்சன் | மடங்கு |
| மண்டபம் | அறிமுகப்படுத்து | முறை |
| இறைவன் | அவை | நன்று |
| நாழிகை | பொலிவு | ஒழுக்கம் |
| அடக்கம் | திண்ணம் | உரியவர் |
| கணவன் | மனைவி | பிள்ளைகள் |

## பயிற்சி

I. விடை எழுது:—

1. அரசன் பறை அறையச் செய்த செய்தி யாது ?

2. குமணர் ஊருக்குச் செய்த நன்மை யாது ?

3. வாணன் ஊருக்குச் செய்த நன்மை யாது? அதனுல் உண்டான நன்மை என்ன ?

4. கபிலர் செய்த நன்மை யாது ?

5. அரசன் யாருக்கு முதற் பரிசு கொடுத்தான் ?—ஏன் ?

II. இருபொருள்கள் கூறுக:— அவை, படி, குடி, அடுத்தவர்.

III. பொருள் வேற்றுமை கூறு:—இரும்பு—விரும்பு, அரி—அறி, அடு—ஆடு, உரி—உறி.

IV. எதிர்ப்பதங்கள் கூறு:—உண்மை, தண்ணீர், பழைமை.

IV இலக்கணம்

இரண்டாவது பாராவிலுள்ள வாக்கியங்களுக்கு எழுவாய் பயனிலைகள் யாவை ? ஓர் அட்டவணையில் எழுது.

கடைசிப் பாராவில் முற்றுப்புள்ளிகளும் காற்புள்ளிகளும் எங்கெங்கு வந்திருக்கின்றன பாருங்கள்.

வாக்கியங்களை முடிக்கும்போது முற்றுப்புள்ளியைத் தவருமல் இடவேண்டும்.

V. கட்டுரைகள்

(1) பொங்கலன்று அத்தாணி மண்டபம் எவ்வாறிருந்தது ? ஐந்து வாக்கியங்களில் சொல்லு ?

(2) நான்கு உதவிகளுள் எது சிறந்தது ? உன் எண்ணம் யாது ?

(3) நீ உலகுக்கு எவ்வாறு உதவி செய்ய எண்ணுகிருய் ?

# 5. முருகன் பாடுகின்ருன்




தாய்

என்ன பண்ணுகிருய்—முருகா
எழுந்து வாடா கண்ணே !
அன்னம் ஆறிப்போகும்—அங்கே
அப்பா காத்திருக்கார்.

குழந்தை

பாட்டுப் பாடுகின்றேன்—இப்போ
பசிக்கவில்லை யம்மா !
கேட்டுவிட்டு நீ போ—புதிய
கீதஞ் சொல்லுகின்றேன்.

## தாய்

என்ன பாட்டுத் தெரியும் ? நீ
எவரிடம் படித்தாய் ?
கன்னுபின்னு வென்றே—கத்திக்
காதைத் துளைத்திடாதே.

## குழந்தை

பறவைப் பாட்டைக் கேட்டேன்—நானும்
பாட்டுப் பாடக்கற்றேன்—அது
சிறகை வீசிப் பறக்கும்—போதே
திருநடங்கள் கற்றேன்.

என்ன ராக தாளம்—என்றே
ஏதும் யானறியேன்.
வண்ணக்கோகிலம் போல்—நானும்
வந்த பாட்டைச் சொல்வேன்.

மலையினின் றருவி—பாய்ந்து
வரக்கண்டுள்ளங் குளிர்வேன்—அது
விலையில்லாத பாட்டை—எனக்கு
விரும்பித் தந்து செல்லும்.

பாட்டுக் கற்றுக் கொண்டேன்—அம்மா
பாயும் வெள்ளம் போல,
காட்டுப் பட்சி போலே—நானும்
கவிகள் பாடுகின்றேன்.

—சுவாமி சுத்தானந்த பாரதியார்

| | | |
|---|---|---|
| பண்ணு | கீதம் | இராகம் |
| அன்னம் | துணை | தாளம் |
| ஆறிப்போகும் | நடம் | வன்ன |
| கோகிலம் | அருவி | வெள்ளம் |

பயிற்சி

I. விடை எழுது:—

1. முருகன் யாரிடம் நடனங் கற்றான் ?

2. விலையில்லாத பாட்டு என்று எதைச் சொல்லுகிறான் ?

3. எதைப் போலக் கவிகளை அவன் பாடுவானும் ?

II. உள்ளங் குளிர்வேன், விலையில்லாத, வெள்ளம் பாய்தல், காதைத் துளைத்தல், கன்று பின்று-இவற்றைச் சொந்த வாக்கியங்களில் வைத்து எழுது.

III. இரு பொருள்கள் கூறு:
அன்னம், ஆறு, பாடு.

IV. இவற்றின் பொருள் கூறு:—
கீதம், கோகிலம், இராகம், தாளம், நடம், கவி.

V. இலக்கணம்
கோடிட்ட இடங்களை எதிர்ச் சொற்களால் நிரப்பு:—

1. குயில் இனிமையாய்ப் பாடும்; கழுதை—கதறும்.

(2) நிலா குளிர்ச்சியானது: வெயில்——.

(3) ஆற்றில் வெள்ளம் பாய்கிறது. குளத்தில் தண்ணீர்——.

VI. கட்டுரை

நீ விரும்பும் ஏதேனும் ஒரு காட்சியைப் பற்றி நான்கைந்து வாக்கியங்கள் எழுது.

## 6. அசோகர்

அவர் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னே, வட இந்தியாவில் பாடலிபுரம் என்ற நகரிலே அசோகர் என்னும் பெய ருள்ள மன்னர் ஒருவர் இருந்தார். அவர் மிகவும் ஆற்றல் வாய்ந்தவர். அவர் இந்தியா முழுமையும் வென்று அதன் பிறகு பிற நாடுகளையும் வெல்ல வேண்டு மென்று விரும்பியிருந்தார்.

அவர் ஒரு முறை கலிங்க நாட்டின்மீது படை யெடுத்தார். அந்நாட்டரசன் அவரை எதிர்த்து நின்றான். போர் மிகக் கடுமை யாக நடந்தது. இரு பக்கங்களிலும் மாண் டவர் பல நூறாயிரவர்; காயம் பட்டவர்கள் பல ஆயிரவர்; குருதி ஆறாக ஓடிற்று. அவ் வாற்றில் பிணங்கள் ஓட இடமில்லாமல் மிதந்தன. கால் இழந்த யானைகளும் தலை இழந்த குதிரைகளும் குன்று போல் குவிந்து கிடந்தன.

அசோகர் போர்க் களத்தைத் தம் கண் களால் கண்டார்; இறந்தவர்களின் பிணங் களைக் கண்டார்; கை இழந்தவரும் கால் இழந்தவரும் துடிதுடித்துப் பதைபதைக்கும் துன்பக் காட்சியைக் கண்டார். அவர்க ளுடைய இழப்பால் எத்தனை குடும்பங்கள்

தவிக்கின்றனவோ என்று அவர் எண்ணினுர். அவர் கண்களினின்று நீர்த்துளிகள் ததும்பி முகத்தில் வழிந்தன. தாம் ஒருவர் கொண்ட நில ஆசை அன்ருே இவ்வளவு கொடுமை களுக்குக் காரணம் என்று எண்ணி ஏங்கி ஞர். "இனி ஒருபோதும் போர் செய்யேன்" என்று அங்கிருந்தபடி சூள் உரைத்தார். அவர் அக்கணமே போரை நிறுத்தி, இறந்து போனவர்கள் இல்லங்களுக்கெல்லாம் ஆறு தல் சொல்லி யனுப்பினுர். காயம் பட்டவர் களுக்கெல்லாம் மருத்துவம் செய்யக் கட் டளை யிட்டார். இவ்வாறு செய்துவிட்டு அவர் தம் படை வீரர்களுடன் பாடலிபுரம் திரும்பினுர்.

அசோகர் காலத்துக்குச் சில நூற்ருண்டு கள் முன்புதான் புத்த பகவான் உலகில் பிறந்து அன்பு, உண்மை, தீங்குஇழையாமை முதலிய அறங்களைப் புகட்டிச் சென்றிருந் தார். அவர் வழியைப் பற்றின துறவிகள் மக்களுக்கு நாடெங்கும் சென்று அறங்களை எடுத்துக் கூறிக்கொண்டிருந்தனர். அசோ கர் அவர்களை அழைத்து அவர்கள் கூறும் அறவுரைகளைக் கேட்டார். அவர் மனம் முற்றிலும் அன்புடைமை என்னும் அறத் திலே நிலை நின்றது.

அக்கருத்தை அவர் நாடெங்கும் பரப்ப வழிகளை நாடினுர். நாட்டில் கொடுமை துன்பம், பசி, பிணி, பொய், களவு இவை அறவே நீங்கவேண்டும் என்று அவர் கட்டளையிட்டார். விலங்குகளை வேட்டை யாடுதல் தீது என்று அவர் அதனை நிறுத்தி னுர்; நாடெங்கும் பெரிய கல் தூண்களை எழுப்பி அவற்றில் அறிவுரைகளை எழுதினுர்; மக்கள் அவற்றை அறிந்து நடக்க வேண்டு மென்று கூறினுர். அவர் காலத்தில் நாடு முழுவதும் அமைதியுடனும் மகிழ்ச்சியுடனும் இருந்தது.



இன்றும் அசோகரை நாம் கொண்டாடுகிறோம். அவர் சென்ற வழியே நாமும் செல்ல வேண்டுமென்று நம் அரசியலார் விரும்புகின்றனர். அசோகர் வழங்கி வந்த அறவாழிக் கொடியையே இன்று இந்தியக் கொடியாக நாம் கொண்டுள்ளோம். அக்கொடி நீடூழி வாழ்வதாக.

| | | | |
|---|---|---|---|
| ஆற்றல் | குடும்பம் | ஆள் | கட்டளை |
| கடுமை | ததும்பி | அக்கணம் | படைவீரர் |
| நூருயிரம் | அமைதி | இல்லம் | உண்மை |
| துறவி | அறவாழி | அறவுரை | வேட்டை |

### பயிற்சி

I. விடை எழுது :—

1. கலிங்கப் போரில் அசோகர் கண்ட துன்பக் காட்சிகள் யாவை ?

2. புத்த பகவான் போதித்த அறங்கள் யாவை ?

3. நாட்டை நலியச் செய்யும் தீமைகள் யாவை ?

4. கல் தூண்களில் எழுதுவதால் நன்மை என்ன ?

5. அசோக சக்கரத்தின் படம் ஒன்று எழுது ?

II. துன்பக்காட்சி, நூற்ருண்டு, அறவுரை, அறவாழி—சொந்த வாக்கியங்களில் வைத்து எழுது.

III. இலக்கணம்

அசோகர் தம் மக்களைப் பார்த்து, "நீங்கள் நல் வாழ்வுடன் வாழ்வதையே நான் விரும்புகிறேன். நீங்கள் உயிர் இனங்களிடம் அன்பு காட்டுங்கள்" என்ருர்.

(1) இந்த வாக்கியத்தில் இடப்பட்ட புள்ளிகள் யாவை ? அவை எங்கெங்கு இடப்பட்டுள்ளன ?

(2) அசோகர், நீங்கள், உயிர் இனங்கள், அன்பு—இப்பெயர்ச் சொற்களுக்கு வகை, எண், பால், இடம் கூறு.

(3) பார்த்து, காட்டுங்கள், என்ருர்—இவ் விணைச் சொற்களுள் முற்று எவை? எச்சம் எவை? இவை ஒவ்வொன்றுக்கும் காலம் கூறு.

## IV. கட்டுரை

1. காந்திமகான் அசோகர் சென்ற வழியே செல்ல விரும்பினர். இது உண்மையா? நான்கைந்து வாக்கியங்களில் சொல்லு.

2. போரினுல் விளையும் தீமைகள் யாவை? நான்கைந்து வாக்கியங்களில் சொல்லு.

# 7. முகவரி எழுதுதல்

நம்மில் பெரும்பாலோர் அடிக்கடி பிற ருக்குக் கடிதம் எழுதிக் கொண்டிருக்கிறார் கள். அவர்களுக்குக் கடிதம் வந்து கொண் டும் இருக்கின்றன. வானஊர்திகள் வழியாக வும், கப்பல்கள் வழியாகவும், இருப்புப் பாதை வண்டித் தொடர்களின் வழியாகவும் நாள்தோறும் கணக்கற்ற கடிதங்கள் சென்று கொண்டே இருக்கின்றன. பல்லாயிரக் கணக்கான அஞ்சல் ஊழியர்கள் அவற்றை வீடுதோறும் தவறாமல் கொடுத்து வருகிறார் கள்.

இது எப்படி நடக்கிறது? இதனால் விளையும் நன்மை என்னவென்று நீங்கள் ஆராய்ந்து இருக்கிறீர்களா? அவசரமான ஒரு செய்தி நமக்குக் காலத்தில் கிடைக்காவிட் டால் விளைவு என்ன ஆகும்? இவற்றை எல் லாம் எண்ணிப் பார்த்தால் அஞ்சல் பிரிவு நமக்குச் செய்து வரும் பேருதவி விளங்கும்.

அஞ்சல்காரர்களுக்கு நாம் செய்ய வேண்டிய உதவிகள் ஒன்றிரண்டு உண்டு. அவை நமக்கு நாமே செய்துகொள்ளும் உதவிகளே ஆகும். அவ்வாறு செய்வது நமது கடமையும் ஆகும். அவை யாவை எனில் சரியானபடி அஞ்சல் தலைகளை ஒட்டுவதும், முகவரிகளை ஒழுங்காக

எழுதுவதுமே ஆகும். கார்டு களுக்கு உள்ளூர்க் கார்டானல் அரை யணுத் தலையும், பிறவற்றிற்கு முக்கால் அணுத் தலையும் ஒட்ட வேண்டு மென்று விதித்திருக்கிறார்கள். உறைகளுக்குக் குறைந் தது இரண்டணுத் தலை ஒட்ட வேண்டும். கனமான உறைகள், புத்தகக் கட்டுகள் போன்றவற்றிற்கு வெவ்வேறான கட்டணங் கள் உண்டு. அவற்றையும் அஞ்சல் தலை களாகத்தான் ஒட்டவேண்டும்.

இத்தலைகளை உறைகளின்மீதும் கார்டு களின்மீதும் முகவரி எழுதும் பக்கத்தில் மேலே வலப்புற ஓரத்தில் ஒட்டவேண்டும். கண்ட இடங்களில் அவற்றை ஒட்டினால் அவற்றின் மீது முத்திரை இடுகிறவர்களுக் குத் தொல்லை உண்டாகும்; நேரமும் கெடும். இது முதன் முதலாகச் செய்ய வேண்டிய கடமை ஆகும்.

முகவரி எழுதுவதில்தான் மிகுந்த கவ னம் வேண்டும். எழுத்து விளக்கமாகவும் ஒழுங்காகவும் இருக்க வேண்டும். யாரிடம் கடிதம் கொடுக்கப்படவேண்டுமோ அவருடைய பெயர் முதலிலும், அவருடைய பெற்றோர் பெயர் எழுதப்பட வேண்டு மானல் அடுத்தும், வெவ்வேறு வரிகளில்

ஒன்றன் கீழ் ஒன்ருக எழுதவேண்டும். பிறகு அவருடைய தொழில் அல்லது பதவியும், அடுத்த வரியில் அவர் வசிக்கும் வீட்டின் எண்ணும், தெருப் பெயரும், கடைசியாக ஊர்ப் பெயரும், மாவட்டம் அல்லது இராச்சியத்தின் பெயரும் அடுத்தடுத்துக் கீழுக்குக் கீழாக எழுதப்படல் வேண்டும். ஊர்ப் பெயரின் கீழ் ஒரு தடித்த கோடு இழுக்க வேண்டும். அப்படிச் செய்தால் அஞ்சல் பிரிவினர் கடிதங்களை அந்தந்த ஊர்களுக்கு எனப் பிரிக்க இலகுவாகும். சில ஊர்களில் அஞ்சல் நிலையம் இல்லாமல் இருக்கலாம். பக்கத்திலுள்ள பெரிய ஊரிலுள்ள அஞ்சல் நிலையத்திலிருந்தே அந்தச் சிறிய ஊருக்குக் கடிதங்களும் பிறவும் போய்ச் சேரவேண்டி இருக்கலாம். அத்தகைய சிற்றூர்களுக்கு முகவரிகள் எழுதும்போது அஞ்சல் நிலையம் இருக்கும் ஊரின் பெயருக்குக் கீழே கோடு இட வேண்டும்.

பம்பாய், கல்கத்தா, சென்னை போன்ற நகரங்களில் பல அஞ்சல் நிலையங்கள் உண்டு. ஒவ்வோர் அஞ்சல் நிலையமும் தன்னைச் சூழ்ந்துள்ள ஒரு குறிப்பிட்ட எல்லைக்குட்பட்ட தெருக்களுக்கு அஞ்சல்களைக் கொண்டு போய்ச் சேர்க்கும். இதற்காக

ஒவ்வோர் எல்லையையும் குறிக்க ஒவ்வோர் எண் இட்டிருக்கிறார்கள். சென்னையில் எண் 5 திருவல்லிக்கேணியைக் குறிக்கும்; எண் 15 சைதாப்பேட்டையைக் குறிக்கும். இவற்றை அறிந்து அந்த அந்த மண்டலத்தின் எண்ணைக் குறிக்க வேண்டும். எடுத்துக் காட்டாக, திருவல்லிக்கேணிக்குக் கடிதம் போகவேண்டுமானால், கடைசியில் சென்னை-5 என்று எழுதினால் போதும்.

கீழே வரும் முகவரியைக் காண்க:-

திரு. சு. வேலாயுதம் பிள்ளை அவர்கள்,
திரு. சுந்தரம் பிள்ளை அவர்களின் மகனார்,
மளிகை வாணிகம்,
40, ஐயன் கடைத் தெரு,
தஞ்சாவூர் மேற்கு.
தஞ்சாவூர்,

| | | |
|---|---|---|
| பெரும்பாலோர் | விளைவு | முகவரி |
| அடிக்கடி | பதவி | முத்திரை |
| ஊர்தி | கடமை | கவனம் |
| அஞ்சல் | உள்ளூர் | அடுத்து |
| அவசரம் | உறை | மண்டலம் |

I. விடை எழுது:—

1. தபால் செல்லும் வழிகள் யாவை ?

2. உறையில் தபால் தலை ஒட்ட வேண்டிய இடம் யாது ?

3. உள்ளூர்க் கார்டு, அயலூர்க் கார்டு என்பவை எவை? ஒவ்வொன்றிற்கும் ஒட்ட வேண்டிய தலைகளின் பெறுமானம் என்ன?

4. முகவரியில் முதலில் எழுதவேண்டியது யாது?

5. கடைசியில் எழுத வேண்டியது எது?

6. எதன் அடியில் கோடிட வேண்டும்?

7. முகவரி பிழையாக எழுதப்பட்டால் விளையும் கேடு என்ன?

II. கணக்கற்ற, ஒன்றிரண்டு, வெவ்வேறான, முதன்முதலாக, அடுத்தடுத்து, சிற்றூர்—இவற்றைச் சொந்த வாக்கியங்களில் வைத்து எழுது.

III. பிறர் × தமர். குறைந்தது × நிறைந்தது. உண்டு × இல்லை. முதல் × கடைசி.—இவை எதிர்ப்பதங்கள். நன்மை, தடித்த, பேருதவி, கீழே— இவற்றிற்கு எதிர்ப்பதங்கள் எழுது.

IV. இலக்கணம்

பின் வரும் வாக்கியங்களில் தடித்த எழுத்தால் அமைந்த சொற்களுக்குப் பதிலாக வேறு சொற்களை அமைக்க:—

1. முகவரிகளைச் **சரியான** முறையில் எழுத வேண்டும்.

2. முகவரிகளில் **முதலில்** எழுத வேண்டியது மனிதரின் பெயர்.

3. **இறுதியில்** எழுத வேண்டியது ஊரின் பெயர்.

V. கட்டுரை

உன் தந்தை, பாட்டன், ஆசிரியர், மாமன், ஒரு நண்பர்—இவர்களின் முகவரிகளை எழுது.

# 8. சொறித் தவளை




உலகில் காணப்படும் உயிர் இனங்களின் எண்ணிக்கைக்கு அளவே இல்லை. அவற்றின் உடல் உறுப்புக்களும், வாழ்க்கை முறைகளும், செயல்களும், குணங்களும் பார்க்கப் பார்க்க வியப்பாய் இருக்கும். பொதுவாக நாம் வீடுகளில் காணும் ஈ, எறும்பு, புழு, தவளை முதலியவற்றில் எத்தனையோ வகைகள் உண்டு. அவை பார்ப்பதற்கு எளியவையாகத் தோன்றினுலும் ஒவ்வொன்றும் மிக விந்தையான அமைப்புக்களைப் பெற்று இருக்கின்றன. அவற்றின் பயன்களும் விந்தையானவை.

பொதுவாக, எல்லா வீடுகளிலும் காணப்படும் சொறித் தவளையைப் பற்றிப் படிப்போம். அது நம் வீடுகளில் எங்கும் காணப்

படும். அது சட்டிப் பானைகள் வைத்திருக்கும் இடங்களில் இடுக்குகளில் பதுங்கி வாழும். அதற்கும் சாதாரணத் தவளைக்கும் வேற்றுமை உண்டு. சாதாரணத் தவளையின் மேல் தோல் வழவழப்பாயும் ஈரமுள்ளதாயும் இருக்கும். சொறித் தவளையின் தோல் காய்ந்தும் சொறிகள் நிறைந்ததாயும் இருக்கும்.

இத்தவளை பகலில் பெரும்பாலும் வெளியே வராது. இதற்கு வாய் மிகப் பெரியது. ஈ, கரையான் முதலிய பூச்சிகளைத் தின்பதில் இதற்கு விருப்பம் அதிகம். இதன் நா மிகவும் நீளமானது. இது தான் இருந்த இடத்திலிருந்தே தன் நீண்ட நாவைத் திடீரென்று நீட்டி ஈ முதலியவற்றை அதனில் ஒட்டிக்கொள்ளச் செய்யும்.

நாய்கள் சொறித் தவளைகளைக் கண்டால் உடனே அவற்றின் மேல் பாயும். ஆனால், ஒரு முறை அத்தவளையைப் பிடித்தால் நாய் அதனிடம் போகாது. ஏனென்றால் சொறித் தவளையின் கண்களுக்குப் பின்புறமாய் இரண்டு கரிய புடைப்புக்கள் இருக்கின்றன. அவை நச்சுப்பைகள். அந்த நஞ்சு நாய்க்குப் பிடிக்காது. ஆகவே, ஒரு முறை ஒரு சொறித் தவளையைப் பிடித்த நாய் மறுமுறை அதனிடம் போகாது.

தவளைக்குக் கண்கள் எப்படி இருக்கின்றன? பார்த்திருக்கிறீர்களா? அதற்குக் கழுத்தைத் திருப்பிப் பார்க்க முடியாது. ஆதலால், கண்கள் பக்கங்களில் குழிகளில் அமைக்கப் படாமல் உயர்த்தி வைக்கப்பட்டுள்ளன. கண்களுக்குப் பின்னே இரண்டு புள்ளிகள் போலத் தோன்றுபவைகளே அதன் காதுகள்.

தவளைக்கு முன்னங்கால்கள் குட்டையாகவும், பின்னங்கால்கள் நீளமாகவும் இருக்கும். அவற்றால் அது நீண்ட தொலை பாயும்.

இதுபோன்ற பல உயிர் இனங்களையும் நாம் ஊன்றிப் பார்க்க வேண்டும். அவற்றின் பழக்க வழக்கங்களைக் கவனிக்க வேண்டும். அப்படிச் செய்வதால் நல்ல அறிவு உண்டாகும்.

| | | |
|---|---|---|
| எண்ணிக்கை | விந்தை | நஞ்சு |
| வழக்கம் | அளவு | வியப்பு |
| உயர்த்தி | செயல் | உடல் |
| பதுங்கி | புள்ளி | குணம் |
| உறுப்பு | நா | ஊன்றி |
| செயல் | புடைப்பு | பழக்கம் |
| முன்னங்கால் | நச்சுப்பை | பின்னங்கால் |

I. விடை எழுது:—

1. சொறித்தவளை வீடுகளில் எங்கே காணப் படும் ?

2. அதன் தோல் எப்படி இருக்கும் ?

3. தவளை தன் இரையை எப்படிப் பிடிக்கும் ?

4. நாய் தவளையை ஒருமுறை பிடித்தால் மறு முறை பிடிக்காது.—ஏன் ?

5. தவளையின் கண்கள் எப்படி அமைந் துள்ளன ?—ஏன் ?

6. தவளையின் கால்கள் எப்படி உள்ளன ? அதனுல் என்ன பயன் ?

II. சட்டிப்பானை, ஏனென்ருல், ஒருமுறை, திடீரென்று, மறுமுறை—இவற்றைச் சொந்த வாக் கியங்களில் வைத்து எழுது.

III. இலக்கணம்

1. சில பெயர்ச் சொற்கள் பொருள்களைக் காட் டும்: நாற்காலி.

சில பெயர்ச் சொற்கள் இடங்களைக் காட்டும்: வீடு.

சில பெயர்ச் சொற்கள் காலத்தைக் காட்டும்: வெள்ளிக்கிழமை.

2. பின்வரும் பெயர்ச் சொற்கள் எவற்றைக் காட்டுகின்றன ?

உலகு, தவளை, இரவு, பூச்சி, குழி, பிராணி.

IV. தவளையின் படம் ஒன்று எழுது.

---

# 9. உயிரினும் மானமே பெரியது

(ஒரு நாடகம்)



[சேரன் கணைக்கால் இரும்பொறைக்கும் சோழன் செங்கணனுக்கும் போர் உண்டாயிற்று. அப்போரில் சேரன் பிடிக்கப்பட்டான். அவனைச் சோழன் குடவாயில் கோட்டத்துச் சிறையில் அடைத்து வைத்தான்.]

காட்சி 1

இடம் : சிறை.

காலம் : பிற்பகல்.

உறுப்பினர் : சேர மன்னன், காவலர்.

[சேரன் சிறையினுள் இருக்கிறான். இரண்டுகாவலர்கள் சிறையைக் காத்து வருகின்றனர்.]

**சேரன் :** அரசனுய்ப் பிறந்தேன்; வணங்கா முடியாய் வாழ்ந்தேன்; இன்று நாய் போல் கட்டுண்டு கிடக்கிறேன். தாகம் மிகுதியாகிறது. தண்ணீருக்கும் தவிக்கும் நிலை வந்து விட்டது. ஏ காவல !

முதற் **காவலன் :** என்னடா முணுமுணுக்கிருன் ?

**இரண்டாம் காவலன் :** அவனை என்னவென்று கேளேனடா !

**மு. காவலன் :** கூப்பிடட்டுமே !

**சேரன் :** காவல ! காவல !

**மு. காவலன் :** ஏன் எனக்குப் பெயர் இல்லையோ ?

**சேரன்:** காவல !

**மு. காவலன் :** என்ன ஐயா, சும்மா உயிரை வாங்குகிறீர் ?

**சேரன் :** தண்ணீர் வேண்டும். தருவாயா ?

**மு. காவலன் :** ஆகட்டும்.

காட்சி 2

இடம்: சோழன் அரண்மனை.
காலம் : பிற்பகல்.
உறுப்பினர் : சோழன், புலவர்.

[சோழன் புலவர் ஒருவரோடு பேசிக் கொண்டிருக்கிருன்.]

சோழன் : புலவர் பெருமானே, தாங்கள் பாடிய இந்நூல் எவ்வளவு அருமையாய் இருக்கிறது ! இதற்கு எவ்வளவு பரிசு கொடுத்தாலும் அமையும். தாங்கள் விரும்புவது ஏதேனும் உண்டோ ?

புலவர் : என் நண்பன் சேரன் சிறையில் துன்புறுகிறான். அவனை விடுதலை செய்தால் அதுவே போதும்.

சோழன் : நானே அவரை விடுதலை செய்வதாகத்தான் இருக்கிறேன். தங்களிடமே ஆணை ஒன்றினை எழுதித் தருகிறேன். அவரை விடுதலை செய்து நாளை அழைத்து வாருங்கள். அவருக்குத் தகுந்த சிறப்புச் செய்து அனுப்புகிறேன். தங்களுக்குத் தகுந்த பரிசில்கள் கொடுத்தனுப்ப விரும்புகிறேன்.

புலவர் : அரசே, மிகுந்த நன்றியறிதல். நாளை, சேரருடன் தங்களை வந்து காண்பேன்.

காட்சி 3

இடம் : சிறைச்சாலை.
காலம் : மாலை.
உறுப்பினர் : சேரன், காவலர், புலவர்.

[சேரன் சிறைக்குள் இருக்கிறான். ஒரு காவலன் வெளியில் நிற்கிறான்.]

**சேரன் :** என்ன ! என் உயிர் இவ்வளவு மேலானதா ? மானங் கெட்ட பின் உயிர் வாழவும் வேண்டுமோ? நான்கு நாழிகையாய்த் தண்ணீர்க்கு நான் கெஞ்சவும், இக்காவலன் என்னை இகழவும் நேர்ந்ததே ! இனி, அவன் தண்ணீர் கொண்டு வந்து கொடுக்கும் வரையில் நான் உயிர் வைத்திருக்க வேண்டுமா ? என் ஆசிரியருக்காக இதுவரை காத்திருந்தேன். அவரும் வருவதாக இல்லை. அவருக்காகத் தரையில் ஒரு கடிதம் எழுதி வைத்து உயிரை விடுகிறேன்.

(எழுதுகிருன்)

**முதற் காவலன் :** ஏ அரசனே, உனக்குத் தண்ணீர் கொண்டுவந்து தொலைத்திருக்கிறேன். குடித்துக் கொள்.

**சேரன் :** காவலரே, உம் தண்ணீரைக் குடித்து நான் உயிர் வைத்திருப்பதினும் என் மானத்தைக் காத்து அவ்வுயிரை விடுகிறேன்.

(சாகிருன்)

**முதற் காவலன்:** ஐயோ ! இவன் செத்துத் தொலைந்தானடா ! என்னடா செய்கிறது ?

இ. காவலன்: ஐயோ! குடி முழுகிப் போயிற்றே! அரசர் அறிந்தால் என்ன ஆகுமோ? (புலவர் வருகிறார்)

புலவர்: காவலர்களே! என் நண்பர் சேர மன்னர் எங்கே? அவருக்கு விடுதலை ஓலை கொண்டு வந்திருக்கிறேன்.

(இறந்து கிடக்கும் சேரனைப் பார்த்து)

ஐயோ! நண்பா, நீ இறந்து போயினையோ? உன் விடுதலைக்காக அரும் பாடுபட்டேனே! நீ இறக்கும்போது என்ன நினைத்தாயோ! இதோ என்னவோ எழுதியிருக்கிறதே! பார்க்கலாம்.

(தரையில் சேரன் எழுதியிருப்பதைப் படிக்கிறார்)

"என் ஆருயிர் ஆசிரியரே! உம் திருவடிகளைத் தொழுது இறக்கிறேன். அரசர் குலத்தில் பிறந்து போர்க்களத்தில் மாளாமல் உயிர் வாழ விரும்பிச் சிறையில் வாழ உடன்பட்டேன். அவ்வாறு மானம் அழிந்தேன். தண்ணீர் கேட்டுக் காவலனால் இகழப்பட்டேன். இப்படி உயிர் வாழ்வதிலும் இறப்பது மேலாகும்; ஆதலால் உயிர் துறக்கிறேன். தங்கள் திருவடிகளுக்குப் பிழை செய்திருந்தால் மன்னிக்க வேண்டுகிறேன் வணக்கம்."

சேரன்

புலவர் : கவரிமான் தன் மயிர் நீப்பின் உயிர் வாழாது; அதைப் போலவே இவரும் தம் மானம் நீத்தபின் உயிர் வாழாமற் போயினுர். இவரே மானிடர் !' இவரே அரசர்! இவர் பெயர் நீடூழி வாழ்க !

| | | | |
|---|---|---|---|
| கோட்டம் | அரண்மனே | பரிசில் | தொலே |
| குலம் | சிறை | பெருமான் | காவலன் |
| மானம் | இகழ் | கட்டுண்டு | துன்புறுகிருன் |
| கெஞ்ச | பாடு | துற | நிலே |
| விடுதலே | ஆசிரியர் | திருவடி | பிழை |

### பயிற்சி

I. விடை எழுது :—

1. போர் எவர்க்கும் எவர்க்கும் நடந்தது ?
2. சேரன் எச்சிறையில் வைக்கப்பட்டான் ?
3. காவலன் அரசனே எவ்வாறு இகழ்ந்தான்?
4. புலவர் சேரனுக்காக என்ன செய்தார் ?
5. அரசன் ஏன் இறந்தான் ?
6. புலவர் என்ன சொல்லி வருந்திஞர் ?

II. சொந்த வாக்கியங்களில் அமை:— வணங்காமுடி, முணுமுணுக்கிருன், மானம் கெட்டபின், மானங் காத்து, குடிமுழுகிப் போகிறது, அரும்பாடு.

### III. இலக்கணம்

மரத்துக்குக் கிளை ஓர் உறுப்பு.

உடலுக்குக் கண் ஓர் உறுப்பு.

சில பெயர்கள் உறுப்புக்களைக் காட்டும்; இவற்றைச் சினைப் பெயர் என்பர்.

1. பின்வரும் பெயர்ச் சொற்களுக்குப் பொருள், இடம், காலம், சினை என்ற பாகுபாடு கூறு:—புத்தகம், பள்ளிக்கூடம், சிறை, தலை, ஆவணி, அரசன்.

2. பின்வரும் சொற்களைப் பெயர்களாகவும் வினைகளாகவும் பயன்படுத்து:— அறை, ஆடு, ஆள், ஆறு, இடி.

——

# 10. நன்றி கொன்ற மாது



பல ஆண்டுகட்கு முன்னே, புகார் என்னும் நகரிலே ஒரு குடியானவன் தன் மனைவியோடு இல்லறம் நடத்தி வந்தான். அவர்களுக்குக் குழந்தை இல்லாத குறை ஒன்று இருந்தது. அவர்கள் ஒரு கீரிப் பிள்ளையைப் பிடித்துத் தம் குழந்தைபோல் வளர்த்து வந்தார்கள். அது அவர்களிடம் மிகுந்த அன்பு காட்டி வந்தது.

இப்படி இருக்கும்போது குடியானவன் மனைவிக்கு ஓர் ஆண் குழந்தை பிறந்தது. அருமையாகப் பெற்ற அக்குழவியை அவர்கள் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்த்து வந்தனர்.

ஒரு நாள் குடியானவன் வயற்புறங்க ளுக்குச் சென்றிருந்தான். குழந்தை தொட் டிலில் உறங்கிக் கொண்டிருந்தது. அதன் தாய் அவசரமாய் அடுத்த வீட்டுக்குப் போக வேண்டியிருந்தது. அவள் கீரியை நோக்கி, "நான் வருமளவும் நம் குழந்தையைக் கண் கொட்டாமல் பார்த்திரு. நான் ஒரு நொடி யில் திரும்பி விடுகிறேன்" என்று சொல்லிப் போனுள்.

அவள் வெளியே போனவுடன் எங் கிருந்தோ ஒரு நாகம் தொட்டிலின் கயிறு வழியாய் இறங்கி வந்து குழந்தையைக் கடிக் கப் போயிற்று. உடனே கீரி சரேலென்று அதன்மீது ஒரே தாவலில் பாய்ந்து அதன் கழுத்தை இறுகப் பிடித்துக் கடித்து அந் நாகத்தைக் கொன்றுவிட்டது.

அந்த மகிழ்ச்சியைத் தன் தாய்க்குத் தெரிவிக்க வேண்டுமென்று எண்ணிக் கீரி குருதி படிந்த வாயுடன் வீட்டின் வாயிலில் வந்தது. அதைக் கண்டு தாய், 'ஐயோ' என்று அலறினுள். அது தன் குழந்தையைக் கடித்துவிட்டு இப்படிப் புறப்பட்டுவிட்டது என்று அவள் எண்ணினுள். அவளுக்கு அளவு கடந்த கோபம் உண்டாயிற்று. அவள் அங்கே கிடந்த மரக்கட்டையைக்

கையிலெடுத்து, "பாவி கீரியே, என் குழந்தையையா நீ கடித்தாய் ?'' என்று சொல்லிக்கொண்டு அதனை அக்கட்டையால் கொன்றுவிட்டாள்.

அவள் பரபரப்புடன் உள்ளே புகுந்தாள். கொடிய பாம்பு ஒன்று துண்டமாய்க் கிடப்பதையும் குழந்தை இன்பமாய்த் தொட்டிலில் உறங்குவதையும் அவள் கண்டாள். தனக்குப் பெரிய நன்றி செய்த கீரியை ஆராயாமல் கொன்றதை எண்ணி அவள் கண்ணீர் விட்டாள்.

அச்சமயத்தில் கணவன் வீட்டுக்கு வந்தான்; நடந்த செய்திகளை அறிந்தான். அவனைத் துன்பம் ஒரு புறமும், கோபம் ஒரு புறமும் அலைத்தன. அவன் தன் மனைவியை நோக்கி, "நீ செய்த குற்றம் மிகவும் கொடியது. நீ பெரும் பாவி ஆனாய்,'' என்று கூறி வருந்தினான்.

அவ்வூரில் கோவலன் என்ற வள்ளல் ஒருவன் இருந்தான். அவன் இச்செய்திகளைக் கேட்டு அவ்வீட்டிற்கு வந்து அவர்களுக்கு ஆறுதல் கூறினான். அவன் நூல் வல்லோர்களைக் கேட்டு அறியாமற் செய்த தீவினை போவதற்காகச் செய்யவேண்டிய கழுவாய்களைச் செய்ய அவர்களுக்குப் பணம்

உதவினுன். அவற்றை அவர்கள் செய்தார்கள். என்ருலும் கீரிக்குத் தான் செய்த தீமையை அம்மாது மறக்கவே யில்லை.

| | | | |
|---|---|---|---|
| இல்லறம் | நொடி | கணவன் | அயல் |
| குறை | இறுக | மனைவி | ஆராயாமல் |
| அவசரம் | குருதி | வள்ளல் | ஆறுதல் |

பயிற்சி

I. விடை எழுது:—

1. குடியானவனுக்கும் அவன் மனைவிக்கும் இருந்த குறை யாது ?

2. அதை அவர்கள் எப்படித் தீர்த்துக் கொண்டார்கள் ?

3. கீரி ஏன் வாயிலில் சென்றது ?

4. மனைவி ஏன் கீரியைக் கொன்ருள் ?

5. கணவன் அவளைப் பாவி என்றது ஏன் ?

6. கோவலன் அவர்களுக்குச் செய்த உதவி யாது ?

II. சொந்த வாக்கியங்களில் அமை:

நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமும், அளவு கடந்த.

III. இலக்கணம்

முன் பாடங்களில் நான்கு விதமான பெயர்ச் சொற்களை அறிந்தீர்கள்; பெயர்ச்சொற்களில் இன்னும் இரண்டு வகைகள் உண்டு.

(1) குணங்களைப் பற்றியவை— நன்மை, கருமை. இவை குணப் பெயர்கள்; பண்புப் பெயர்கள் என்றும் சொல்லலாம்.

(2) தொழில்களைப் பற்றியவை— நடத்தல், உண்ணல். இவை தொழிற் பெயர்கள்.

ஆக, பொருள்பெயர், இடப் பெயர், காலப் பெயர், சினைப்பெயர், குணப்பெயர், தொழிற்பெயர் எனப் பெயர்ச்சொற்கள் ஆறுவகைப்படும்.

IV. பின்வரும் சொற்களைப் பெயர்களாகவும் வினைகளாகவும் பயன்படுத்து:—இரை, ஈ, ஓடு, கல், துணி.

V. பின்வரும் பெயர்ச் சொற்களுக்கு வகைகள் கூறு:—நகர், கீரி, உறக்கம், வாய், கோபம், கை, நொடி.

VI. கட்டுரை

1. மனைவி அவசரப் படாதவளாய் இருந்திருந்தால் கீரியைக் கண்டவுடன் என்ன கேட்டிருப்பாள்?

2. அதற்குக் கீரி என்ன விடை பகர்ந்திருக்கும்?

---

# 11. அமெரிக்காவைக் கண்டது




ஏறக்குறைய ஐந்நூறு ஆண்டுகளுக்கு முன்னே ஐரோப்பாக் கண்டத்திலே கொலம்பசு என்ற ஒருவர் இருந்தார். நம் இந்தியா ஐரோப்பாக் கண்டத்துக்குக் கிழக்கே உள்ளது. கொலம்பசு இந்தியாவிற்கு வருவதற்கு ஒரு புதிய வழியைக் கண்டுபிடிக்க விரும்பினார். அவருக்கு உலகம் வட்ட வடிவமானது என்பது தெரியும். ஆகையால், அவர் தம் நாட்டினின்று மேற்கு நோக்கிச் சென்று கொண்டே இருந்தால் இந்தியாவுக்கு வந்து விடலாம் என்று எண்ணினார்.

அவர் மூன்று கப்பல்களுடன் மேற்கு நோக்கிப் புறப்பட்டார். அவருடன் பலர்

துணையாகச் சென்றனர். கப்பல்கள் கட லில் சென்றன. எங்கும் ஒரே நீர். நீரை யன்றி வேறு ஒன்றும் கண்களிற் படவில்லை. நாட்கள் பல சென்றன. அவர்கள் புறப் பட்டு அறுபது நாட்கள் ஆயின. நிலம் எதையும் அவர்கள் காணவில்லை. கொலம் பசுடன் சென்றவர்கள் முணுமுணுக்கத் தொடங்கினார்கள்; வழி தெரியாமல் கடலில் போய்க் கொண்டே இருந்தால் அது எங்கே கொண்டுபோய் விடுமோ என்று அவர்கள் அஞ்சினார்கள்.

கொலம்பசு மட்டும் மனத் திட்பத் துடன் இருந்தார். இந்தியாவிற்குப் புதியவழி யைக் கண்டுபிடித்து விடலாம் என்று அவர் உறுதியாய் இருந்தார். அவர் தம் மக்களைப் பொறுமையுடன் இருக்கும்படி கெஞ்சினார். அப்பொழுது சில நிலப் பறவைகள் வானத் திலே பறந்தன. நிலம் அருகில் இல்லாவிட் டால் பறவைகள் எங்கிருந்து வரமுடியும் என்று அவர் எண்ணினார். அவர் என்ன சொன்னாலும் அவருடைய துணைவர்களுக்கு நம்பிக்கை உண்டாகவில்லை. அவர்கள் அவரைத் தூக்கிக் கடலில் எறிந்து விட்டுத் தாம் மட்டும் வந்த வழியே திரும்பி விடத் தீர்மானித்தார்கள். நாட்கள் அறு பத்துமூன்றும் ஆயின.

திடீரென்று ஒருவர் கண்ணில் நிலம் தென்பட்டது. அவர், 'நிலம் நிலம்!' என்று கூவினர். எல்லாரும் பார்த்தார்கள். கொலம்பசு நிலமொன்று தூரத்தில் தெரிவதைக் கண்டு கீழே மண்டியிட்டுக் கடவுளுக்கு நன்றி கூறினர்.

அவர்கள் அந்த இடத்துக்குச் சென்றார்கள்; அங்கேயுள்ள மனிதர்களைக் கண்டார்கள். கொலம்பசு அந்த நிலத்தை இந்தியா என்றும் அந்த மனிதர்களை இந்தியர் என்றும் கருதினர். ஆனல் அது புதியதொரு நிலம். அதுதான் அமெரிக்கா. இன்று உலகத்திலேயே மிகுந்த செல்வத்துடன் விளங்கும் கண்டமான அமெரிக்கா அதுவே.

| | | | |
|---|---|---|---|
| கண்டம் | பொறுமை | நம்பிக்கை | உறுதி |
| வட்டம் | பயின்று | இருப்பு | வானம் |
| திட்பம் | துணை | விளங்கு | நன்றி |

பயிற்சி

I. விடை எழுது :

1. உலகத்தின் வடிவு என்ன ?

2. கொலம்பசு மேற்கே சென்றல் எங்கே சேரலாம் என்று எண்ணினர் ?

3. அவருடன் எத்தனை கப்பல்கள் சென்றன ?

4. எத்தனை நாட்கள் அவர்கள் கடலிற் சென்றனர் ?

5. மக்கள் ஏன் அஞ்சினார்கள் ?

6. நிலத்தைக் காண முடியும் என்று கொலம்பசு நினைக்கக் காரணம் என்ன ?

7. நிலத்தைக் கண்டதும் கொலம்பசு செய்தது என்ன ?

8. கொலம்பசு கண்டுபிடித்த கண்டம் யாது ?

9. இந்தப் பாடத்துக்கு வேறு என்ன தலைப்புக் கொடுக்கலாம் ?

II. இலக்கணம் :

பின்வரும் வாக்கியங்களில் உள்ள வினைச் சொற்களைக் காட்டு:—

1. நான் சென்ற ஆண்டு மூன்றும் வகுப்பில் படித்தேன்.

2. நான் இந்த ஆண்டு நான்காம் வகுப்பில் படிக்கிறேன்.

3. நான் அடுத்த ஆண்டு ஐந்தாம் வகுப்பில் படிப்பேன்.

படித்தேன், படிக்கிறேன், படிப்பேன்.

இம்மூன்றுக்கும் உள்ள வேற்றுமை யாது ?

**III.** பின்வரும் வாக்கியங்களில் புள்ளிகள் இட்டுக் காட்டு :

கொலம்பசு தம்முடன் வந்தவர்களைப் பார்த்து தயவு செய்து இன்னும் மூன்று நாட்கள் பொறுங்கள் என்றார் அவர்கள் அதற்கு இணங்காமல் நாங்கள் இனி உம்மோடு வரமாட்டோம் என்று சொன்னார்கள்

**IV.** சொந்த வாக்கியங்களில் அமைத்து எழுது :

ஏறக்குறைய, நிலப்பறவை, முணுமுணுக்க, திடீரென்று, வேறொன்றும், மண்டியிட்டு.

**V.** கட்டுரை :

கொலம்பசு நிலத்தைக் கண்ட பிறகு, அவருக்கும் அவரைச் சேர்ந்தவர்களுக்கும் இடையே நடந்த பேச்சை நீங்கள் ஊகித்துச் சொல்லுங்கள்.

# 12. தேசிங்கு மன்னன்




[ஏறக்குறைய முந்நூறு ஆண்டுகட்கு முன்னே செஞ்சிக் கோட்டையில் தேசிங்கு ராஜன் என்ற மன்னன் இருந்தான். அவன் பல கலைகளிலும் வல்லவனாய் விளங்கினான். அக்காலத்தில் டில்லியிலிருந்த பாதுஷாவிடம் ஒரு முரட்டுக் குதிரை இருந்தது. அதை அடக்குவதற்குப் பலர் முயன்று தோற்றார்கள். தேசிங்கு அப்பொழுது இளம் வயதினன். அவன் டில்லிக்குச் சென்று அக்குதிரையை அடக்கி அதன்மீது ஏறிச் சென்றான். இவ்வரலாற்றைக் கீழே காணலாம் : ]

குதிரையின் அருகே வந்து நின்றான்<br>
குழந்தை தேசிங்கு ;<br>
கொல்லும் வேங்கை போல நின்றது<br>
குதிரையும் அப்போது.

பார்த்தான் மன்னன் லகானைக் கையால்
பாங்குடனே பற்றிப்
பாய்ந்தே ஏறி முதுகில் அமர்ந்தான்
பாலன் தேசிங்கு.

கலகல வென்றே சிரித்துப் பிடித்தான்
கையில் சாட்டைதனை ;
கனைத்த பரியைக் கழுத்தில் தட்டினன்
கண்மணி தேசிங்கு.

தட்டின தட்டில் குதிரை கிளம்பித்
தரையில் நில்லாமல்
தாவியே வானில் சென்று பாய்ந்தது
தங்கமேனிக் குதிரை.

மலையும் குன்றும் உடைந்து சிதறி
மண்ணில் விழுவதைப்பார் ;
குன்று மலைகளைத் தாண்டிக் குதிரை
குதித்துப் பாயுதுபார் !

அசுவம் போகும் வேகத் தாலே
அலையுது மேகமெலாம்
மேகம் இடித்து மின்னல் கக்கி
மழையைப் பொழியுதுபார் !

புரவி போகும் வேகம் அறிந்தான்
　　புலிக்குட்டி தேசிங்கு
பொல்லாக் குதிரை தன்னைக் கொல்லப்
　　போகுதென் றறிந்தான்.

லகானை இழுத்துக் கொடுத்தான் சிமிட்டா
　　ராஜா தேசிங்கு
சிமிட்டா கொடுத்த வேகத் தினுலே
　　திகைத்து நின்றதுபார்!

நின்ற குதிரையை டில்லிக்குத் திருப்பி
　　நேரே ஓட்டிவந்தான்;
நிமிஷந் தன்னில் கீழே குதித்து
　　நின்றுன் தேசிங்கு.

—தேசிங்குராஜன் கதை

| | | | |
|---|---|---|---|
| பாதுஷா | வேங்கை | மேனி | வயது |
| முயன்று | லகானை | அசுவம் | கண்மணி |
| தோற்ருர் | சாட்டை | சிமிட்டா | கணைத்து |

பயிற்சி

I. விடை எழுது :—

1. குதிரை செய்தவை யாவை?
2. தேசிங்கு அதை எவ்வாறு அடக்கினுர்?

3. குதிரை பாய்ந்ததால் சிதறி மண்ணில் விழுந்தவை எவை ?

4. அசுவம்போகும் வேகத்தில் மேகம் என்ன ஆயிற்று ?

5. புரவி போகும் வேகம் அறிந்த தேசிங்கு என்ன கருதினுன் ?

## II. இலக்கணம்

இப்பாடலில் பின்வரும் வினைச் சொற்கள் வந்துள்ளன :—நின்ருன், பாய்ந்தது, அறிந்தான், கொடுத்தான்—இச்சொற்கள் எல்லாம் எந்தக் காலத்தைக் காட்டுகின்றன? இவை ஒவ்வொன்றிற்கும் வேறு இரண்டு காலங்களையும் எழுது.

## III. கட்டுரை

இப்பாடலில் வந்துள்ள வரலாற்றைத் தேசிங்கே சொல்லுவது போலச் சொல்லு.



# 13. விடுகதைகள்

1

தண் தரும் நீர் நிறைந்திருக்கும்
குளமுமல்லன் ;
தவள நிறம் பெற்றிருக்கும்
சங்குமல்லன் ;
கண்ட உடன் நரை விளங்கும்
கிழவனல்லன் ;
காரிகையார் கை ஏறும்
கிளியுமல்லன் ;
மண்டலத்தில் விலைப்படும்
ஓர் அடிமையல்லன் ;
வாளாலே வெட்டி மடித்திட்ட போதும்
நாணயம் காட்டி எல்லோருக்கும்
இதம் செய்வான்.
எவன் அவன் ?



2

நிலத்தன் நிலந்தனைத்
தேடும் நெருப்புமன்று.
நீள் வானத்தே பறக்கும்
பறவையன்று.
தலைமீது கொம்பிருக்
கும் ; பந்தரன்று.
பகரும் ஓர் வாலாட்டும்
குரங்குமன்று.
சலத்தைக் கண்டால்
அஞ்சும் ; நரியுமன்று.



சண்டைக்குச்செல்லும் சேனபதியன்று.
மைந்தர் கையாளும் கடிகாரமன்று.
நாடி இதன் பொருள் அறிந்து சொல்லுவீரே.

3



எவரையும் ஒரு கண்ணுகப் பார்ப்பார்;
கார்மிக்க நிறத்தார்;
வேற்றுமை பாராமல் சவத்திடத்தும் பொருள் கவர்வார்.
சகுனத்திற்கும் சாப்பாட்டிற்கும் சமயம் நோக்கி வருவார்.
அருணனும் பின்வர முன்னே வருவார்.
மேலான ஆயுள் உள்ளார்.
அறிவுள்ளோரே இவர் எவர் சொல்வீர் ?

| | | |
|---|---|---|
| தவள நிறம் | பந்தர் | கார் |
| நரை | பகரும் | சவம் |
| காரிகை | சேனபதி | சகுனம் |
| மண்டலம் | மைந்தர் | அருணன் |
| நாணயம் | கடிகாரம் | ஆயுள் |

I. விடை எழுது:—

1. முள்ளங்கியின் இயல்புகள் யாவை ?
2. காற்ருடியின் இயல்புகள் யாவை ?
3. காகத்தின் இயல்புகள் யாவை ?

# 14. கடிதங்கள்

முன்னொரு பாடத்தில் அஞ்சல்களில் முகவரி எழுதும் முறையைப் பற்றிப் படித்தீர்கள். இனிக் கடிதங்கள் எழுதுவது எப்படி என்று இங்குப் பார்ப்போம்:

கடிதங்களில் பல வகைகள் உண்டு. நண்பர்களுக்கும் உறவினர்களுக்கும் எழுதும் கடிதங்கள் ஒரு வகை. இவைகளே நாம் பெரும்பாலும் எழுதுபவை. நமக்குப் பிறரால் எவ்வளவோ வேலைகள் ஆக வேண்டியிருக்கின்றன. வெளியூரிலிருந்து ஒரு பொருளை நாம் தருவிக்க விரும்பலாம்; அல்லது வெளிநாட்டார் ஒருவரால் நமக்கு ஏதேனும் வேலை ஆக வேண்டியிருக்கலாம். இவ்வகையிலும் கடிதங்கள் எழுதுகிறோம். அதிகாரிகளுக்கும் கடிதங்கள் எழுதுகிறோம். இன்னும் வேறு விதமான கடிதங்களும் உண்டு.

எல்லாக் கடிதங்களையும் எழுதுவதற்குச் சில பொது விதிகள் உண்டு. கடிதம் என்பது நாம் நேரில் பேசுவதற்குப் பதிலாய் எழுதுவது. பேசும்போது நாம் எவ்வளவு ஒழுங்காகவும் விளக்கமாகவும் பேச வேண்டுமோ அவ்வாறே கடிதத்தையும் நாம் எழுதவேண்டும். அன்றியும், எழுதப்படுகிறவர்க்கும் நமக்கும் உள்ள அன்பு நட்பு இவற்றிற்குரிய சொற்களைக் கையாள வேண்டும்.

இன்னும் கடிதத்தின் தலைப்பில் நம்முடைய இடம், தேதி இவற்றை எழுத

வேண்டும். பிறகு மரியாதையையும் அன்பை யும் காட்டும் சொற்களால் கடிதத்தைத் தொடங்கிப் பின்னரே செய்திகளை எழுத வேண்டும். முடிவில் நம் கையொப்பத்துக்கு மேலேயும் அன்பையும் மரியாதையையும் காட்டக்கூடிய சொற்களை எழுதவேண்டும்.

கீழே ஒரு கடிதம் எழுதப்பட்டிருக்கும் முறையைக் காணுங்கள்.

30, வடக்குச் சித்திரை வீதி,
திருவரங்கம்.
19—10—'56

என் அருமைத் தந்தையார் அவர்களுக்கு, பணிவான வணக்கம். இங்கு யாவரும் நலம். அங்கு என் அன்புள்ள தாயாரும் தாங்களும் நலமென்றே எண்ணுகிறேன்.

இங்கு நான் நன்றாகப் படித்து வருகிறேன். எங்கள் பள்ளிக்கூடத்தில் ஆசிரியரும் பிள்ளைகளும் சேர்ந்து 29-10-'56 அன்று இங்கிருந்து புறப்பட்டு மேட்டூர் அணை பார்க்கப் போவதாக எண்ணி இருக்கிறார்கள். நானும் போகலாம் என்று என் மாமாவும் மாமியும் கூறுகிறார்கள். தங்கள் அன்பான கட்டளையை எதிர்பார்க்கிறேன்.

என் அன்புள்ள தாயாருக்கும் தங்களுக்கும் என் மனம் நிறைந்த வணக்கம்.

இங்ஙனம்,
தங்கள் அன்பும் பணிவுமுள்ள
சோமு.

இவ்வாறே நண்பர், உறவினர் முதலி யோருக்கு முகவுரையையும் முடிவையும் ஏற்றபடி மாற்றி அமைத்து எழுதலாம்.

இனி, வேறு கடிதம் ஒன்று எவ்வாறு எழுதலாம் என்று காண்போம். கீழே உள்ள கடிதத்தைப் பாருங்கள்:

வி. ரா. சந்திரன் 40, அருண்டேல் தெரு,
மாணவன் சென்னை-4.
19—10—'56

இராமகிருஷ்ண பதிப்பகத்தார்,
பள்ளி நூல்கள் வெளியிடுபவர்,
5, ராமசாமி தெரு,
தஞ்சாவூர்.

ஐயன்மீர்,

பின்னே காணப்பெறும் புத்தகங்களை அன்பு கூர்ந்து மேலே கண்ட என் முகவரிக்கு வி. பி. பி. வழியாக அனுப்ப வேண்டுகிறேன்.

1. முல்லை வாசகம், முதற் புத்தகம் 2 படிகள்
2. ஷை 2-ஆம் புத்தகம் 3 ,,
3. ஷை 3-ஆம் புத்தகம் 2 ,,
4. ஷை 4-ஆம் புத்தகம் 2 ,,

இங்ஙனம்,
தங்கள் உண்மையுள்ள
வி. ரா. சந்திரன்.

| | | | |
|---|---|---|---|
| வகை | வணக்கம் | கையாள | அதிகாரி |
| உறவினர் | விதம் | திருவடி | நட்பு |
| பெரும்பாலும் | நேர்மை | அணை | படிகள் |
| முகவுரை | அன்றியும் | நண்பர் | கட்டளை |

## பயிற்சி

I. விடை எழுது:—

1. நம்மோடு ஒத்த நண்பர்க்கு எழுதும் கடிதத்தைத் தொடங்குவது எப்படி ?

2. இரண்டு நாள் ஊருக்குப் போய்வர அனுமதி கேட்டு ஆசிரியர்க்கு ஒரு கடிதம் எழுதுவது எப்படி ?

3. தம்பிக்குக் கடிதம் எழுதவேண்டுமானல், தொடக்கமும் முடிவும் எப்படியிருக்கவேண்டும் ?

4. அதிகாரிக்கு எழுதும் கடிதத்தை எப்படித் தொடங்குவது ?

II. சொந்த வாக்கியங்களில் அமைத்து எழுது:—

பொதுவிதி, அன்புகூர்ந்து, காண்போம், இவற்றிற்குரிய, பதிப்பகத்தார்.

III. பொருள் வேற்றுமை என்ன ?

தலை-தளை, கட்டு-காட்டு, மனம்-மணம்.

IV. இலக்கணம்

1. வினைச் சொற்கள் காலம் காட்டும்.

எழுதினான்—இது நடந்த காலம் அல்லது இறந்த காலம்.

எழுதுகிறான்—இது நடக்கிற காலம் அல்லது நிகழ் காலம்.

எழுதுவான்—இது நடக்கப் போகும் காலம் அல்லது எதிர் காலம்.

2. பின்வரும் வினைச் சொற்களுக்குக் காலம் கூறு:—

வந்தோம், படிக்கிறான், உண்ணும், உறங்கினேன், பேசுவாய்.

V. உன் தமக்கை திருமணத்திற்காக ஒரு மண அழைப்புக் கடிதம் எழுது.

———

# 15. மழைத் துளி சொன்ன கதை




மல்லிகை ஒரு நல்ல பெண்; பாடங்களை நன்ருகப் படித்து வகுப்பில் முதல்வள் ஆக இருப்பவள். ஒரு நாள் மல்லிகை மாலை நேரத்தில் விளையாடும் தோட்டத்தில் வந்து கூடுவதாகத் தன் தோழிகளுக்குக் கூறியிருந் தாள். ஆதலால், அவள் பள்ளிக்கூடம் விட்டு வீடு வந்ததும் சிற்றுண்டியை விரை வாக உண்டாள்; உடனே புதிய உடைகளை அணிந்துகொண்டு வெளியே புறப்பட்டாள். அப்பொழுது எதிர்பாராமல் மழை பெய் தது. மல்லிகைக்கு உண்டான ஏமாற்றத் துக்கு எல்லையில்லை. அவள் முகத்தைச்

சுளித்துக் கொண்டு, "பாழும் மழை என் விளையாட்டைக் கெடுத்துவிட்டது" என்று கூறிக்கொண்டே தன் முகத்தில் விழுந்த சில நீர்த்துளிகளை விரலால் வழித்துக் கீழே எறிந்தாள்.

அவள் பேசி முடித்தாளோ இல்லையோ, எங்கிருந்தோ ஒரு குரல், "என்னை ஏன் திட்டுகிறாய் ?" என்று கேட்டது. மல்லிகை திடுக்கிட்டாள். அவள் வீட்டுத் தாழ்வாரத்தில் சில பூச்செடிகள் வளர்ந்து இருந்தன. அவற்றில் ஒரு செடியில் ஓர் இலையின் நுனியில் முத்துப் போல ஓர் உருவம் நின்று கொண்டிருந்தது. அது கண்ணாடி போல ஒளி வீசிற்று. அது மிகச் சிறியதாய் இருந்தாலும் ஒரு பெண் வடிவில் தோன்றியதைப் பார்த்து மல்லிகை வியந்தாள். மறுபடியும் அக்குரல், 'என்னை ஏன் திட்டுகிறாய், மல்லிகா ?' என்றது.

மல்லிகை அப்பெண்ணைப் பார்த்து, "நான் உன்னைத் திட்ட வில்லையே ! நீ யார்? இங்கே எப்படி வந்தாய் ?" என்று கேட்டாள். அதன் பிறகு அவர்களுக்குள்ளே பின்வருமாறு பேச்சு நடந்தது:

மழைத்துளி : நீ உன் முகத்திலிருந்து வழித்து எறிந்தாயே! அந்த மழைத்துளியே நான்.

மல்லிகை : உன்னைப் பார்க்க என்ன விந்தையாக இருக்கிறது! நீ எங்கிருந்து இங்கே வந்தாய்?

மழைத் : வானத்திலிருந்து வந்தேன். உனக்குத் தெரியாதா?

மல்லிகை : வானத்தில் எப்படி இருந்தாய்?

மழைத் : எனக்கு அங்கே உடன்பிறந்தார் பலர் இருக்கின்றனர். நாங்கள் ஒன்று கூடி உல்லாசமாக உலாவிக்கொண்டு இருந்தோம்.

மல்லிகை: இங்கே எப்படி வந்தாய்?

மழைத் : எங்கள் மன்னராகிய காற்று ஏவின இடத்துக்கு நாங்கள் செல்ல வேண்டும். இவ்வூர் மழை இல்லாமல் வாடுகிறது என்று அவர் எங்களை இங்கே அனுப்பினர். எங்கள்மீது குளிர்ச்சியை அவர் பாய்ச்சினர். நாங்கள் துளிகளாகி மெல்ல இங்கே இறங்கினோம்.

மல்லிகை: வானத்தில் இருந்தபோது எப்படி இருந்தீர்கள்?

மழைத் : நீராவியாக இருந்தோம்.

மல்லிகை: நீங்கள் எங்கிருந்து வானத்துக்கு வந்தீர்கள்?

மழைத் : நாங்கள் கடலில் நீராக இருந்தோம். சூரியன் எங்களைக் காய்ச்சி ஆவியாய் மாற்றினான்.

மல்லிகை : நல்லது. நீங்கள் மழையாகப் பெய்து என்ன செய்வீர்கள்?

மழைத் : மண்ணுக்குள் பலர் போவோம். அங்கே பயிர் பச்சைகளுக்கெல்லாம் உணவாவோம். பலர் மண்ணுக்குள் நெடுந்தொலை சென்று விடுவோம். பலர் நிலத்தின்மீது வழிந்தோடி வாய்க்கால்கள் ஆகி ஆறுகளாகி முடிவில் நாங்கள் பிறந்த இடமாகிய கடலுக்கே செல்வோம்.

மல்லிகை : மண்ணுக்குள் போனால் உங்களுக்கு அச்சமாக இராதா?

மழைத் : அச்சம் ஏன்? மண்ணுக்குள் எத்தனை அழகான இடங்கள் இருக்கின்றன? அங்கே நாங்கள் விளையாடிக் கொண்டு இருப்போம்.

மல்லிகை : பிறகு வெளியே வரவே மாட்டீர்களா?

மழைத் : ஏன் வரமாட்டோம்? கிணறுகளி லுள்ள நீர் எல்லாம் நாங்களே. ஊற் றுக்களிலிருந்தும் நாங்களே வெளியே வருகிறோம்.

மல்லிகை : இவ்வளவு வேலை செய்கிறீர் களா? ஆறு, குளம், கிணறு, ஊற்று எங்கும் இருப்பவர்கள் நீங்களோ?

மழைத் : ஆம்.

மல்லிகை : உன் பெருமையை அறியாமல் உன்னைத் திட்டினேன். மன்னிக்க ; என் விளையாட்டை நீ கெடுத்துவிட் டாயே என்றுதான் சினந்தேன்.

மழைத் : உன் விளையாட்டைப் பெரியதாய் நினைக்கிறாயா? ஊர் நன்மையைக் கருது கிறாயா? நாங்கள் பொழியாவிட்டால் ஊர் என்னவாகும்? எண்ணிப்பார்!

மல்லிகை : ஆம். உண்மையே! மழை இல் லாவிட்டால் உலகு ஏது? உன் பெரு மையை உணர்ந்தேன்.

இப்படிப் பேசிக்கொண்டிருந்தபோதே மழைத்துளிப் பெண் மறைந்துவிட்டாள். பொழுதும் போய்விட்டதால் மல்லிகை தன் வீட்டினுள் சென்றாள்.

| | | |
|---|---|---|
| தோழி | வானம் | ஆவி |
| திட்டுகிருய் | உல்லாசம் | அச்சம் |
| உருவம் | குளிர்ச்சி | ஊற்று |
| விந்தை | காய்ச்சி | தாழ்வாரம் |
| சிற்றுண்டி | நீராவி | சினந்தேன் |

பயிற்சி

I. விடை எழுது:

1. இலே நுனியிலிருந்து துளி எப்படித் தோன் றிற்று?

2. மேகத்திற்கு மன்னர் யார் ?

3. மேகம் எப்படி உண்டாகிறது ?

4. ஊற்று நீரும் மழை நீரே என்பது எப்படி ?

II. இலக்கணம்

1. உலகப் படைப்பில் ஆண், பெண் என்ற பிரிவுகள் இருப்பதைக் காண்கிருேம். ஆண் பெண் களேக் குறிக்கச் சொற்களும் அமைந்திருக்கின்றன. ஆணுக்குரிய சொற்களேச் சிறிதளவு மாற்றியே பெண்ணுக்குரிய சொற்களே உண்டாக்கலாம்.

தோழன்—ஆண்பால் சொல்; தோழி-பெண் பால் சொல்.

2. பின்வரும் ஆண்பால் சொற்களேப் பெண் பாற் சொற்களாக மாற்று:—அரசன், உடன்பிறந்தான், மாணவன், தம்பி, தந்தை, வேலேக்காரன்.

III. கட்டுரை

கடல் நீர், மேக நீர், ஆற்று நீர், ஊற்று நீர் எல்லாம் ஒன்றே.—எப்படி ? சில வாக்கியங்களில் சொல்லு.

———

# 16. அரசாட்சி எளிதோ?



'உனக்கென்ன? நீ ஓர் அரசன்!' என்று ஒருவரைப் பார்த்து மற்றொருவர் சில சமயங் களில் பேச நாம் கேட்டிருக்கிறோம். அரச ஞக இருத்தல் சிறப்பு உடையது என்றும், பெருமை உடையது என்றும் உல கம் நினைக்கும். ஆனல், அரசனுக்கு உரிய பொறுப்பும் கவலைகளும் இவ்வளவு என்று பலர் கருதுவதில்லை. பதவியில் மேலோங்க ஓங்கக் கடமைகளும் பொறுப்புக்களும் மிகுதியாகும்.

நம் தமிழகத்தின் மன்னர்கள் சிறிதள வும் தம் கடமைகளில் தவருதவர்களாக

இருக்க வேண்டும் என்று கருதி வந்தார்கள். ஓர் அரசன் அறியாமல் தன் கையால் ஒரு குற்றம் செய்து விட்டதற்காகத் தன் கையையே வெட்டிக் கொண்டான். அவன் அக் கைக்குப் பதிலாகப் பொன்னுல் ஒரு கை செய்து வைத்துக் கொண்டான். அவனுக்குப் பொற்கைப் பாண்டியன் என்ற ஒரு பெயர் உண்டாயிற்று. மற்ருெரு பாண்டியன் ஆராயாமல் யாரோ ஒருவன் சொல்லைக் கேட்டுக் கோவலன் என்ற குற்றம் அற்றவனைக் கொன்ருன். அவ்வாறு தான் தவறு செய்ததை உணர்ந்ததும் தன் உயிரைத் தானே மாய்த்துக் கொண்டான். இவ்வாறு நீதியை உயிரினும் மேலாய் மதித்தவர்களின் வரலாறுகள் நம்மிடையே எவ்வளவோ விளங்குகின்றன.

நெடு நாட்களுக்கு முன்னே சோழர்களின் தலைநகர்களுள் ஒன்ருன ஆரூரிலே மனுச் சோழன் என்ற மன்னன் ஆண்டு வந்தான். அரண்மனை வாயிலில் அவன் ஒரு மணியைக் கட்டி வைத்திருந்தான். அதனை ஆராய்ச்சி மணி என்பர். எவரேனும் அரசனிடம் தம் குறையைத் தெரிவித்துக் கொள்ள வேண்டுமானுல், அவர் அந்த மணியை அசைப்பர் ; உடனே அரசன் வெளியே

வந்து மணி அடித்தவரைக் கண்டு, அவர் குறையைக் கேட்டு, அதனை உடனே தீர்த்து வைப்பான். ஆனால், அந்த மணி நெடு நாட்களாக அடிக்கப்படாமலே இருந்தது.

ஒரு நாள் திடீரென்று அம்மணி ஒலி கேட்டது; அரசன் திடுக்கிட்டான்; வாயிலில் ஓடி வந்தான். அவனுடன் அமைச்சர்களும் வந்தார்கள். வாயிலில் ஒரு பசு மாடு கண்ணீர் ஆறாகப் பெருக்கிக் கொண்டு நின்றது. அரசன் அதனைப் பார்த்து மனம் கரைந்தான். அவன் தன் அமைச்சர்களை நோக்கி, "இவ்வாயில்லா உயிருக்கு இன்னல் விளைத்தவர் யாரோ? அமைச்சர்களே! உங்கள் ஆட்சி நன்றாயிருக்கிறது" என்று கூறினார்.

அச்சொற்களைக் கேட்ட அமைச்சர்களுள் ஒருவன்," வேந்தே! இதன் துன்பத்தை நான் அறிவேன். தங்கள் மகன் தேர் ஊர்ந்து தெரு வழியே சென்று கொண்டிருந்தான். தெருவில் கூட்டம் அளவில்லாமல் போய்க் கொண்டிருந்தது. எங்கிருந்தோ இப்பசுவின் கன்று அங்கே கூட்டத்துள் புகுந்து பாய்ந்து தேர்க்காலில் பட்டு அரைந்து போயிற்று" என்றான்.

அரசன் தாய்ப் பசுவை நோக்கி, "தாயே! நீ வாயில்லாப் பிராணி. இருந்தாலும் உன் பிள்ளையை இழந்ததால் நீ அடைந்துள்ள துயர் இவ்வளவு என்பதை நான் உணரக்கூடும். உன் கன்றைத் திருப்பித்தர என்னால் இயலாது. எனினும், உனக்குக் குற்றம் செய்தவனைக் கொன்று நான் என் செங்கோலை நிலைநிறுத்துவேன்" என்று கூறி ஓர் அமைச்சனை நோக்கி, இப்பசுவின் கன்றைக் கொன்ற பாதகனைத் தேரின் சக்கரத்தில் இட்டு அரைத்துக் கொன்றுவா" என்று கட்டளை யிட்டான்.

அமைச்சர்கள் அரசகுமாரனைக் கொல்லல் ஆகாது என்று எவ்வளவோ சொல்லிப் பார்த்தார்கள். அரசன் அச்சொற்களுக்குச் செவி சாய்க்கவில்லை. அவனால் கட்டளை இடப்பட்ட அமைச்சன் வேறு வழி இல்லாமல் வெளியேறினான். ஆனால், அவனுக்கு அரசன் மகனைக் கொல்ல மனம் வரவில்லை. அவன் தன்னைத் தானே கொன்று கொண்டான்.

அரசனுக்குத் துன்பத்துக்குமேல் துன்பம் உண்டாயிற்று. கன்றின் கொலைக்காக அவன் தன் மகனையும், அமைச்சன் தற்கொலைக்காகத் தன்னையும் கொன்று

கொள்ள முடிவு செய்தான். அவ்வண்ணம் அவன் தானே தேர் ஊர்ந்து தன் மகனைத் தேர்க்காலில் இட்டு அரைத்தான்; பிறகு தானே தன்னைக் கொன்று கொள்ளத் தொடங்கினான். அப்பொழுது திடீரென்று கடவுள் அருளால் இறந்த கன்றும் இளவரசனும் அமைச்சனும் உயிர்பெற்று எழுந்தனர்.

இவ்வாறு புராணம் கூறுகிறது. அரசருடைய பொறுப்பையும் கடமையையும் எடுத்துக் காட்ட இப்புராணம் இன்றும் எல்லாராலும் பேசப்பட்டு வருகிறது. இப்புராணக் கதையை ஒட்டிய அறிகுறிகளை நாம் இன்றும் ஆரூரில் காண்கிறோம்.

| | | |
|---|---|---|
| உரிய | வரலாறு | அமைச்சன் |
| பொறுப்பு | ஆராய்ச்சி | கொலை |
| கவலை | குறை | புராணம் |
| பதவி | இன்னல் | எடுத்துக்காட்ட |
| கடமை | அரை | ஒட்டிய |

பயிற்சி

I. விடை எழுது:—

1. அரசனை உலகம் ஏன் பெருமையாகக் கூறுகிறது?

2. பொற்கைப் பாண்டியன் என்ற பெயருக்குக் காரணம் யாது?

3. கோவலனுக்கு அரசன் செய்த தீங்கு யாது ?

4. ஆராய்ச்சி மணியின் பயன் என்ன ?

5. தாய்ப் பசுவை நோக்கி அரசன் கூறியவை என்ன ?

6. சோழன் நீதியுள்ளவன் என்பது எப்படித் தெரிந்தது ?

II. சொந்த வாக்கியங்களில் அமைத்து எழுது :

மேலோங்க, தேரூர்ந்து, செங்கோல், நிலை நிறுத்துவேன், செவிசாய்க்கவில்லை.

III. இரு பொருள்கள் கூறு :— கவலை, மணி, ஆறு, ஊர்.

IV. இலக்கணம்

1. சொற்களில் ஆண் பெண் என்ற பிரிவை மக்களைக் குறிக்கும் பெயர்களில் மட்டுமே கொள்கிறோம். விலங்கு, பறவை, கல், மண் முதலியவற்றில் இவ்வேற்றுமையை நாம் கொண்டாடுவதில்லை. அவற்றுள் ஒவ்வொன்றையும் ஒன்றன்பால் என்கிறோம்.

2. பின்வரும் சொற்களுக்குப் பால் கூறு:—
பசு, மகன், நகரம், சோழன், ஆசிரியை.

3. பின்வரும் வினைகளிலிருந்து பெயர்களை உண்டாக்கு:— நினை, இழ, கொள்.

V. கட்டுரை

1. மனுச்சோழன் மகனை அரைத்தது நியாயமா ? உன் கருத்தைச் சொல்லு.

2. நீ அரசனாய் இருக்க விரும்புகிறாயா ? ஏன் ?

---

# 17. அழுக்குச் சுப்பன்



ஓர் ஊரில் சுப்பன் என்னும் பெயருடைய சிறுவன் ஒருவன் இருந்தான். அவன் பல் துலக்குவதில்லை; முகங் கழுவுவதில்லை; தலையைச் சீவுவதில்லை; உடலைத் தேய்த்துக் குளிப்பதில்லை; துணியைத் துவைத்துக் கட்டுவதில்லை; அவன் உடலில் படலம் படலமாய் அழுக்குப் படிந்து கிடக்கும். தலையில் பேனும் ஈரும் நிறைந்து கிடக்கும். அவன் உடலிலிருந்து கெட்ட நாற்றம் எழும்பி வீசும். அவனைக் கண்டோர் எவரும் அருவருப்பர். அவன் அருகில் எவரும் அணுக விரும்பார். அவன் எப்போதும் நோயால் துன்புற்று வந்தான். இப்படியிருந்தும் அவனுக்கு நல்ல அறிவு உண்டாகவில்லை.

அவன் ஒரு நாள் தன் அத்தையின் ஊருக்குச் சென்ருன். அத்தை அவனை அன்புடன் வரவேற்ருள். ஆனல், அவனுடைய அழுக்கு உடலையும் அழுக்கு உடையையும் கண்டு அவள் மனம் வருந்தினுள். அவள் சுப்பனை நோக்கி, "அப்பா ! இந்த ஊரில் உனக்கு ஓர் அண்ணன் இருக்கிருன். நீ அவனைக் காண வேண்டாமா?" என்ருள். சுப்பனுக்குத் தன் அண்ணனைக் காண வேண்டும் என்ற அவா உண்டாயிற்று. அவன் சிற்றுண்டி அருந்திவிட்டு அண்ணனைப் பார்க்க வீட்டைவிட்டு வெளியே சென்ருன்.

முதலில் அங்கு ஒரு கோழி அவன் முன் சென்றது. அக்கோழியே தன் அண்ணன் என்று அவன் கருதி அதை நோக்கி, 'அண்ணு!' என்று அழைத்தான். அதைக் கேட்டவுடன் கோழி நகைத்து, "அட ! அழுக்குப் பிடித்த பயலே! நான் உன் அண்ணனு? என் உடலைப் பார்! எவ்வளவு பளபளவென்று நான் அதனை வைத்திருக்கிறேன். போ ; உன்னேடு நான் பேசவும் வெட்கம் அடைகிறேன்" என்றது.

சுப்பனுக்கு மனம் வருந்தியது. அவன் சிறிது தொலை சென்ருன். அங்கே ஒரு பூனை

ஒரு திண்ணையில் படுத்துக்கொண்டு தன் உடலை நாவால் நக்கிக் கொண்டு இருந்தது. சுப்பன் அதுவே தன் அண்ணனாக இருக்கலாமென்று எண்ணி, அதன் அருகில் போனான். உடனே அந்தப் பூனை எழுந்து, "அடே! அழுக்குப் பிடித்த பையா! என் அருகில் வராதே! உன்னிடமிருந்து வீசும் அழுக்கு நாற்றம் என் மூக்கைத் துளைக்கிறது. நான் எப்படி என் உடலை வைத்திருக்கிறேன் பார். போ! போ!" என்றது.

சுப்பன் நாணத்தால் தலை குனிந்து தெருவிலே சிறிது தொலை சென்றான். அங்கே ஒரு சாக்கடையில் ஒரு பெரிய பன்றி பல குட்டிகளுடன் சேற்றில் புரண்டு கொண்டு இருந்தது. அவற்றின் உடலெல்லாம் சேறு நிறைந்து கிடந்தது. அங்கிருந்து கிளம்பிய நாற்றத்தைச் சுப்பனால் தாங்க முடியவில்லை. அவ்வளவு அழுக்கு நிறைந்த இடத்தை அவன் கண்டதே இல்லை. அவன் அவ்விடத்தை விட்டு அகல எண்ணினான். ஆனால் பன்றி அவனிடம் ஓடி வந்து, "தம்பி, உன் வருகையை நான் நெடு நாட்களாக எதிர்பார்த்திருக்கிறேன்; நாம் இருவரும் கூடி இச்சாக்கடையில் விளையாடுவோம், வா" என்று அழைத்தது.

சுப்பனுக்கு அப்பன்றியைக் காணவும் மனங்கொள்ளவில்லை. அது தன்னைத் தம்பி என்று அழைத்ததைக் கேட்டு அவன் மிகவும் நாணினன். இனி ஒரு கணங்கூட அழுக்குடன் இருக்கக்கூடாது என்று அவன் முடிவு செய்தான். உடனே அவன் குளக் கரைக்குச் சென்று பற்களை நன்ருகத் துலக் கினன். உடல் எல்லாவற்றையும் நன்ருகக் கழுவிக் கொண்டான்.

அவன் வீட்டுக்குப் போனபோது அவ னுடைய அத்தை வெந்நீர் போட்டு வைத் திருந்தாள். அவள் அவனுக்கு எண்ணெய் தேய்த்துக் குளிப்பாட்டினள். அவனுக்குப் புதிய ஆடை ஒன்று கொடுத்தாள். அவள் அவன் தலையை நன்ருகச் சீவி, பேன் முத லானவற்றை யெல்லாம் போக்கினள்.

சுப்பன் புதிய பையனுகி விட்டான். அவன் தன் ஊருக்குத் திரும்பியபோது, அவனைக் கண்ட அவ்வூரார் யாவரும் வியந் தார்கள். அழுக்குச் சுப்பன் என்ற பெயர் அவனை விட்டு நீங்கியது. தூய சுப்பன் என்ற பெயர் அவனுக்கு உண்டாயிற்று.

| | | | |
|---|---|---|---|
| துலக்கு | அருந்து | சாக்கடை | ஈர் |
| துவைத்து | வெட்கம் | கணம் | மூக்கு |
| பேன் | நாற்றம் | வெந்நீர் | சீவி |

### பயிற்சி

I. விடை எழுது:—

1. சுப்பனுடைய அழுக்கு உடல் எப்படி இருந்தது ?

2. கோழி, பூனை—இவை தம்மை எப்படிச் சுத்தம் செய்து கொள்ளுகின்றன ?

3. பூனை ஏன் சுப்பனை விரட்டியது ?

4. சுப்பனைத் தம்பியாகக் கொண்டது எந்த விலங்கு ? ஏன் ?

5. அழுக்குச் சுப்பன் தூய சுப்பன் ஆனது எப்படி ?

II. சொந்த வாக்கியங்களில் அமைத்து எழுது:

வரவேற்றாள், சிற்றுண்டி, அழுக்கு, சேறு, நெடுநாட்களாக.

III. சென்றான், என்றான்—இந்த இரண்டு சொற்களின் பொருள்களைக் குறிக்கும் வேறு சொற்கள் யாவை ?

IV. இலக்கணம்

1. ஒருமைச் சொற்களுக்கு ஆண்பால், பெண்பால், ஒன்றன்பால் என்ற மூன்று பால்களைக் கண்டோம்.

2. பன்மைச் சொற்களுக்கு ஆண், பெண் என்று வேற்றுமையில்லை. மக்களைக் குறிக்கும் பன்மைச் சொற்களைப் பலர்பால் என்று கூறவேண்டும்.

3. மக்கள் அல்லாப் பன்மைச் சொற்களைப் பலவின்பால் என்று கூறவேண்டும்.

4. பின்காணும் தடித்த எழுத்திலுள்ள சொற்களுக்கு (1) வகை (2) இடம் (3) பால் இவைகளைக் கூறு.

**சோழன் தஞ்சையில் சிவபெருமானுக்கும் அவன் தேவிக்கும் கோவில் கட்டினான். அதைப் பார்க்க மக்கள் பலர் தினந்தோறும் செல்கிறார்கள்.**

V. கட்டுரை

சுப்பன் தன் கதையைத் தானே சொல்வது போல் கூறு.

---



# 18. பனைமரம்

(பாட்டு)

பனைமரமே, பனைமரமே,
ஏன்வளர்ந்தாய்? பனைமரமே!
நான்வளர்ந்த காரியத்தை
நாட்டாரே! சொல்லுகிறேன். 1

படுக்கப்பாய் நானுவேன்
பாய்முடையத் தோப்பாவேன்
வீடுகட்ட வாரையாவேன்
மேல்பரப்ப ஓலையாவேன் 2

கட்டநல்ல கயிருவேன்
　　கன்றுகட்டத் தும்பாவேன்
வெட்டநல்ல விறகாவேன்
　　விசிறிகட்டக் குருத்தாவேன் 3

சித்திரைக் கோடையிலே
　　சிறந்தநல்ல நுங்காவேன்
பசித்துவரு வோர்தமக்கு
　　பனம்பழமும் நானுவேன் 4

நணைந்துவரு வோர்களுக்கு
　　நல்லசம்பங் குடையாவேன்
உடல்களைத்து வருவோர்க்கு
　　உயர்பதநீர் நானுவேன். 5

—பழம் பாட்டு

| | | | |
|---|---|---|---|
| வளர்ந்தாய் | வாரை | சித்திரை | பதநீர் |
| நாட்டாரே | பரப்ப | கோடை | களைத்து |
| முடைய | தும்பு | நுங்கு | நணைந்து |
| தோப்பு | குருத்து | சம்பங்குடை | விறகு |

### பயிற்சி

விடை எழுது :—

1. பனைமரம் தோப்பாவதேன்?
2. குருத்தினுல் என்ன செய்ய முடியும்?

3. நுங்கு, பனம்பழம்-இவற்றினை நீ எப்படிப் பெறுவாய் ?

4. கன்றுகட்ட, வீடுகட்ட, விசிறிகட்டப் பயன்படுபவை யாவை ?

5. பனைமரத்தினால் மனிதர்கள் அடையும் பயன்கள் யாவை ?

II. சொந்த வாக்கியங்களில் அமை :
வளர்ந்தாய், கோடையிலே, பசித்துவருவோர், படுக்கப் பாய்.

III. இரு பொருள் கூறு :—ஆடு, முடை, பழம்.

IV. இலக்கணம்

1. நல்ல × கெட்ட-இவை எதிர்ப்பதங்கள். வளர்ந்த, வீடு, மேல், பழம், கோடை-இவற்றிற்கு எதிர்ப்பதங்கள் எழுது.

2. இப்பாட்டில் உள்ள பெயர்ச் சொற்களை எடுத்து எழுது.

V. கட்டுரை

பனைமரம் தன்னைப் பற்றிக் கூறுவது போலப் பத்து வரிகளில் கூறு.

---

# 19. வள்ளல் அதியமான்



தகடூர் என்ற ஊரில் அதியமான் என்ற அரசன் ஒருவன் இருந்தான். அவன் போரில் வல்லவன். தமிழ் அறிவும், தமிழ் அன்பும் அவனுக்கு மிகவும் உண்டு. பாணர், பெருஞ் சித்திரனர், பொன்முடியார், ஔவையார் என்ற புலவர்கள் அவனுடைய வீரம், கொடை முதலியவற்றைப் பற்றிப் பல பாடல் களைப் பாடியிருக்கிருர்கள். புலவர்களுக்கு வேண்டியமட்டும் அவன் பொருள் கொடுப் பான். தனக்கென்று எதையும் வைத்துக் கொள்ளாமல் பிறருக்குக் கொடுக்கும் இயல்பு உடையவனை வள்ளல் என்று

அழைப்பது வழக்கம். அத்தகைய வள்ளல் களுள் அதியமானும் ஒருவனுகக் கருதப்பட் டான். அவன் வள்ளல் தன்மையை எடுத் துக்காட்ட அவன் வாழ்க்கையிலிருந்து ஒரு பகுதியைக் கூறுவோம்:

ஒரு நாள் அதியமான் தன் அரண்மனை யில் அமைச்சர் முதலியோர் சூழ அத் தாணி மண்டபத்தில் வீற்றிருந்தான். அச்சம யம் அங்கே ஒரு முனிவர் எழுந்தருளினுர். அரசன் எழுந்து அவரை வணங்கி, அவரைப் பெரிதும் பாராட்டினுன். அம்முனிவர் மன் னனை நோக்கி, "வேந்தே! நான் தவஞ் செய்துகொண்டிருக்கும் மலையில் ஒரு கல் வெடிப்பில் ஒரு கருநெல்லி மரம் இருக்கின் றது. அதனில் பன்னிரண்டு ஆண்டு களுக்கு ஒரு முறை ஒரு பழம் பழுக்கும். அதன் சுவை அமுதின் சுவையைப் போன் றது. இன்னும் அதன் பெருமை ஒன்று உண்டு. அக்கனியை உண்பவர் நோய் நொடியின்றி நீண்டநாள் உயிருடன் வாழ் வர். என் போன்ற முனிவர் அதனைத் தின்றே நீண்ட காலம் உயிரோடு இருக்கின்ற னர். ஆனுல் அது கிடைத்தற்கு அரிது. இன்று எனக்கு அப்பழம் கிடைத்தது. அதனை மன்னனுக்கு அளித்தலே நன்று

என்று எண்ணி எடுத்து வந்தேன். இதனை நீ அருந்தி நீடூழி வாழ்வாயாக'' என்று கூறி, பருத்து உருண்டு திரண்டு விளங்கிய ஒரு கருநெல்லிக் கனியை அவன் கைகளில் ஈந்தார்.

அதியமான் அதனை மிகுந்த அன்போடு பெற்று முனிவருக்குத் தக்க மரியாதைகளைச் செய்து அனுப்பினன்; அருமையாகக் கிடைத்த அக்கனியை உண்ண விரும்பி, அதன் அழகை நோக்கினன். அச்சமயம் ஔவையார் என்ற பெரும் புலவர் அங்கே வந்தார். அவரைக் கண்டவுடன் அரசன் பெருமகிழ்ச்சி யடைந்து அவரை வணங்கி வரவேற்று, அவரைத் தன்னேடு அரியாசனத்தில் அமர்த்திக்கொண்டான்.

நெடுநாள் தன் அருமைப் புதல்வனை விட்டுப் பிரிந்திருந்த ஒரு தாய் அவனைத் திடீரென்று கண்டதுபோல், ஔவையார் கண்களில் நீர் மல்க அவனை நோக்கினர். அரசன் அவருடைய வயது முதிர்ந்த உடலைத் தடவிக் கொடுத்து, பிரிந்து காற்றில் அலைந்து கொண்டிருந்த நரைக் கூந்தலை ஒரு குழவி தன் அருமைத் தாயை நோக்குவது போல் நோக்கினன்.

பின்பு அரசன் அம்மையை நோக்கி, "அம்மையே! தாங்கள் நல்ல சமயத்தில் வந்தீர்கள். சற்று முன்புதான் எனக்கு இனிய ஒரு தின்பண்டம் கிடைத்தது. அதைப் பெற்றபோதே எனக்குத் தங்கள் நினைவு உண்டாயிற்று. இதோ இருக்கிறது பாருங்கள். இந்த நெல்லிக்கனியை அருந்துங்கள்" என்று முனிவர் கொடுத்த பழத்தை அப்புலவரிடம் கொடுத்தான். அவரும் அதனை அன்புடன் ஏற்று உண்டார்.

ஔவை : "என் அருமை மன்ன, இவ்வளவு அருமையான கனி உனக்கு எங்கிருந்து கிடைத்தது ?"

அதியமான் : "சற்று முன் ஒரு முனிவர் இதனை எனக்கு ஈந்தார். இது மிகவும் அருமையான கனியாம். இதனை உண்பவர் நீண்ட காலம் உயிரோடு இருப்பாராம்."

ஔவை : "அப்படியாயின், நீ உண்ணுமல் எனக்கு ஏன் இதனைக் கொடுத்தாய் ?

அதியமான் : "நான் நீண்ட நாள் இருப்பதால் பயன் யாது ?"

ஔவை : “நான் ஒன்றுக்கும் உதவாத ஏழைக் கிழவி. நீயோ மன்னர் பெருமான். நீ வாழ்ந்தால் உலகம் வாழும். என்னல் என்ன பயன் ?

அதியமான் : “நன்கு சொன்னீர். நான் இறந்தபின் என் இடத்தை நிரப்ப என்னிலும் சிறந்த வீரஞன என் மகன் இருக்கிருன். உலகில் என்னைப்போன்ற மன்னர்கள் அளவில்லாமல் இருக்கிருர்கள். உங்களைப் போன்ற புலவர் வேறு எவர் உண்டு? உங்கள் இடத்தை வேறு யாரால் நிரப்ப இயலும்? நீங்களே உலகில் நீண்டு வாழ வேண்டும். ஆகவே இக்கனியை நீங்கள் உண்பதே நல்லதாகும்.”

ஔவை : “ஆ! அதியமானே, உன் வள்ளல் தன்மையை நான் என்ன வென்று கூறுவேன்! உன்னைப்போல் கொடையாளி வேறு யார் உண்டு ? நீ சிவபிரான் போல் என்றும் வாழ் வாயாக.”

இவ்வாறு அவர்கள் பேசிக்கொண்டு நீண்ட நேரம் கழித்தனர். அதியமான் ஔவையாரைப் பல நாள் தன் அரண்மனையில் வைத்திருந்து சிறப்பித்து அனுப்பினன்.

| | | | |
|---|---|---|---|
| போர் | வள்ளல் | வெடிப்பு | ஈந்தார் |
| அமுது | முதிர்ந்த | வீரம் | இயல்பு |
| நிரப்ப | பாராட்டினுன் | நீடூழி | வீற்றிருந்தான் |
| கொடை | வாழ்க்கை | புலவர் | மல்க |

## பயிற்சி

I. விடை எழுது :—

1. வள்ளல் என்பவர் யார் ?

2. அதியமான் வாழ்ந்த இடம் யாது ?

3. அவனுடைய குணங்கள் யாவை ?

4. முனிவர்க்குக் கிடைத்த நெல்லிக் கனி எப்படி இருந்தது ?

5. அதியமான் ஏன் அதனை ஔவைக்குக் கொடுத்தான் ?

6. ஔவையார் நீண்டு வாழ்வதால் உலகுக்கு நன்மை என்ன ?

7. அதியமானை வள்ளல் என்பது பொருந்துமா ?

II. இலக்கணம்

இந்தப் பாடத்தில் வந்துள்ள சில வினைச் சொற்களைக் கீழே தருகிறோம்:—

கொடுக்கும், கூறுவோம், பருத்து, உருண்டு, திரண்டு, விளங்கிற்று.

இவற்றுள் சில சொற்களின் பொருள் முடிந்திருக்கிறது. அவை யாவை ?

சில சொற்கள் பொருள் முடியாமல் வேறு சொற்களைத் தழுவுகின்றன. அவை யாவை ?

முடிந்த வினைகளை முற்றுவினை என்போம்.

முடியாத வினைகளை எச்சவினை என்போம்.

## III. கட்டுரை

இப்பாடத்தில் வந்துள்ள நெல்லிக் கனியின் வரலாற்றைத் தொகுத்துக் கூறு.

---

# 20. குருவியும் யானையும்



கோயமுத்தூர் மாவட்டத்திலே வெள்ளியங்கிரிக்கு அருகில் அடர்ந்த காடு ஒன்று உண்டு. அங்கே இலைகள் அடர்ந்த ஒரு மரத்திலே தேன் குருவி ஒன்று தன் கூட்டை அமைத்துக் குஞ்சுகளுடன் வாழ்நாளை இன்பமாய்க் கழித்து வந்தது. அது நாள்தோறும் வெளியிற் சென்று தன் நீண்டு வளைந்த அலகினால் மலர்களில் உள்ள தேனை உறிஞ்சித் தன் குஞ்சுகளுக்குக் கொண்டு வந்து ஊட்டும். அது உருவத்தில் மிகச் சிறியதாயினும் சிறந்த உடல் வலிவும் கூரிய அறிவும் பெற்று இருந்தது.

அதே காட்டில் ஒரு யானையும் இருந்தது. அதன் உடல் மிகவும் பருத்திருந்தது. அதன் கரிய உடலைக் கண்ட எவரும் அஞ்சுவர். அது காடெல்லாம் திரிந்து மரங்களை ஒடித்தும், நீர் ஓடைகளைத் தூர்த்தும், சிறிய உயிர்ப் பிராணிகளைத் தன் கால்களால் நசுக்கியும், துதிக்கையால் பிய்த்தும், இவ்வாறு காட்டில் உள்ள உயிர்களுக் கெல்லாம் தொல்லையை விளைத்துக்கொண்டு இருந்தது.

ஒருநாள் அந்த யானை தேன் குருவி வாழும் மரத்தண்டை வந்து அதன் கிளைகளை உலுக்கிற்று. அப்பொழுது தாய்க் குருவி அங்கு இல்லை. குஞ்சுகள் எல்லாம் நடுநடுங்கின. தாய்ப்பறவை வெளியிற் சென்று திரும்பி வந்ததும் அவை அதனிடம் தாம் அன்று பட்ட துன்பத்தைத் தெரிவித்தன.

அடுத்த நாளும் யானை அங்கே வந்து முன் மாதிரியே மரத்தை உலுக்கத் தொடங்கிற்று. குருவி அதைப் பார்த்து, "ஐயா, நாங்கள் எளியவர்கள். எங்களை ஒன்றும் செய்யாதீர். நீர் அன்பு கூர்ந்து வேறு மரத்துக்குச் செல்லும்" என்று மரியாதையாகக் கேட்டுக்கொண்டது.

அச்சொற்களைக் கேட்டு யானை, "அற்பக் குருவியே, என் விருப்பப்படி செய்

வதைத் தடுக்க நீ யார்? நான் அப்படித் தான் உன் மரத்தை உலுக்குவேன்; இங்கே இருக்க உனக்கு முடியாவிட்டால் நீ வேறு எங்காவது ஓடிப்போ!" என்று மிகவும் இகழ்ச்சியாகப் பேசிற்று.

அதற்குக் குருவி, "ஐயா யானையாரே, பதட்டம் வேண்டா. நான் தலைமுறை தலை முறையாக் இங்கே வாழ்கிறேன். இஃது எனக்கு உரிய மரம். என் இடத்தை விட்டு விரட்ட ஒருவருக்கும் உரிமை இல்லை. நீர் இன்னும் இங்கே நிற்பீரானால் உம்மை அழச் செய்வேன். ஓடிப்போம்" என்று கூறிற்று.

யானை அதைக் கேட்டு நகைத்து, "அற்பப் பறவையே, உனக்கு இவ்வளவு துடுக்கா? இந்த மரத்தையே வேரோடு பிடுங்கிச் சாய்த்து உன்னையும் உன் குஞ்சு களையும் என் கால்களில் இட்டு நசுக்கி விடுகிறேன் பார்" என்று சொல்லித் தன் தலையால் மரத்தை ஒரு முட்டு முட்டிற்று.

குருவி கோபங்கொண்டு, "மூட விலங்கே, உனக்கு அறிவு புகட்டுவேன்" என்று சொல்லிப் பறந்து வந்து அதன் பெரிய காதுகளுள் ஒன்றில் புகுந்து கொண்

டது. அங்கே அது சிறகுகளை அடித்துக் கொண்டும், அலகினால் காதின் ஓரங்களைக் கொத்திக் கொண்டும் யானைக்குப் பெருந் துன்பம் விளைத்தது. யானையால் துன்பம் பொறுக்க முடியவில்லை. அது எவ்வளவு முயன்றாலும் அதனால் குருவியை வெளி யேற்ற முடியவில்லை.

அது அழுதுகொண்டே, “குருவியாரே, உம்முடைய பெருமையை நான் உணர வில்லை. நான் இன்று முதல் இக்காட்டை விட்டே ஓடி விடுகிறேன். இனி ஒருவரை யும் நான் துன்புறுத்த மாட்டேன். தயை செய்து வெளியே வாரும்” என்று கெஞ் சிற்று.

அச்சொற்களைக் கேட்டுக் குருவி வெளியே வந்தது. அன்று முதல் யானை அங்கே வரவேயில்லை. சிறிய குருவியின் துணிவால் காட்டு மரங்களும் உயிர்ப்பிராணி களும் துன்பத்திலிருந்து நீங்கின.

| | | |
|---|---|---|
| அலகு | குஞ்சு | உரிமை |
| உறிஞ்சு | துன்பம் | உலுக்கிற்று |
| உருவம் | உரிய | துடுக்கு |
| கூரிய | கூர்ந்து | நசுக்கு |
| விளைத்து | இகழ்ச்சி | கொத்து |

## பயிற்சி

I. விடை எழுது :

1. தேன் குருவியின் உருவம் எவ்வாறு இருந்தது ?

2. யானை குருவிக்கு எப்படித் துன்பம் விளைத்தது ?

3. குருவி யானைக்கு எப்படி அறிவு புகட்டிற்று ?

4. அறிவு பெரியதா ? உடல் வலிமை பெரியதா ?

II. சொந்த வாக்கியங்களில் அமை :

நீர் ஓடை, அன்புகூர்ந்து, தலைமுறை, உயிர்ப்பிராணி, தயை செய்து, வெளியேற்ற.

III. வெளியே × உள்ளே—இவை எதிர்ச் சொற்கள். துன்பம், இகழ்ச்சி, அமுது, பெருமை, சிறிய—இவற்றிற்கு எதிர்ச்சொற்கள் எழுது.

IV. இலக்கணம்

1. ஒரு வாக்கியத்தில் எழுவாயும் பயனிலையும் ஒத்திருக்க வேண்டும்.

கீழே உள்ள வாக்கியங்களில் அவை ஒத்திருக்கவில்லை. திருத்திக் கூறு.

(1) நான் உன் மரத்தை உலுக்குவாய்.
(2) குஞ்சுகள் அஞ்சியது.
(3) குருவி யானையின் காதினுள் புகுந்தோம்.

2. ஒருவர் பேசியதை அப்படியே எழுதும்போது " " என்ற குறிகளை இடவேண்டும். இந்தப் பாடத்தில் இக்குறிகள் எவ்வாறு இடப்பட்டு இருக்கின்றன ? பாருங்கள்.

V. நாடகம்

இக்கதையை நடித்துக் காட்டுங்கள்.

---

## செய்யுட் பகுதி

# 1. தமிழ் வாழ்க

வாழ்க நிரந்தரம் ! வாழ்க தமிழ் மொழி !
வாழிய வாழியவே !
வான மளந்த(து) அனைத்தும் அளந்திடும்
வண்மொழி வாழியவே !
ஏழ்கடல்வைப்பினும் தன்மணம் வீசி
இசைகொண்டு வாழியவே !
எங்கள் தமிழ்மொழி எங்கள் தமிழ்மொழி
என்றென்றும் வாழியவே !

—சி. சுப்பிரமணிய பாரதியார்.

### குறிப்புரை

நிரந்தரம்-எப்போதும், வானம் அளந்தது அனைத்தும்-உலகில் உள்ள எல்லாப் பொருள்களும், வண் மொழி-வளம் நிறைந்த மொழி, ஏழ்கடல் வைப்பு-கடல்களால் சூழப்பட்ட நிலம், தன் மணம்-தன்சிறப்பு, வீசி-பரப்பி, இசை-புகழ்.

### பயிற்சி

I. விடை எழுது :

1. தமிழ் எத்தகைய மொழி ?
2. அது எப்படி வாழ வேண்டுமென்கிறார் பாரதியார் ?
3. வானமளந்தது, வண்மொழி, வைப்பு—பொருள் எழுது.

II. இச்செய்யுளை உரைநடையாக எழுது.

## 2. கல்வியின் பெருமை

கடல்உலகில் உற்றபொரு ளுக்குளே
நன்மைதரு
கல்விநிலை பெற்றபொருளாம் ;
கனலினுல் உருகாது; புனலினுல் கரையாது;
கள்வரால் திருடொணுது;
திடமான ராசாதி ராசரா லும்அதைத்
தீண்டிச் சிதைக்கொணுது;
செயல்மிக்க மாதரால் சேதமா காதொருவர்
செலவிடிற் குறைவுருதங்(கு)
அடமிகு சகோதரர்க்(கு) இடமது
கொடாததனை
அளவிடவும் முடியாதுகாண் !
அப்பொரு ளினைப்பெரு(து) இப்புவியில்
அலைகின்ற
அற்பர்உறு பயனென்கொலோ !
கடகயம் உரித்து(உ)டலி னில்தரித்
திடுதேவ !
கற்பக இராசமேவும்
கங்கைபுனை ஈசனே ! மங்கைமகிழ் நேசனே!
கயிலையங் கிரிவாசனே !

— கயிலாச நாதர் சதகம்

குறிப்புரை

கடல் உலகு-கடல் சூழ்ந்த உலகு; உற்ற-பொருந்திய; கனல்-தீ; புனல்-தண்ணீர்; திருடொணுது-திருட முடியாது; திடமான-வலிமை மிகுந்த; தீண்டி-தொட்டு; சிதைக் கொணுது-அழிக்க முடியாது; அடம்-பிடிவாதம்; புவி-உலகம்; உறு-அடையும். கடகயம்-மதம் பிடித்த யானை. மங்கை-உமையம்மை.

பயிற்சி

I. விடை எழுது:—

1. உலகில் நிலைபெற்ற பொருள் யாது ?

2. கல்வி அழியாத பொருள் என்பது எப்படித் தெரிகிறது ?

3. உருகாது, கரையாது, குறைவுருது, அளவிட முடியாது—எது ? எப்படி ?

4. கல்வியைப் பெருதவர் எவர் ?

II. செல்வத்தைவிடக் கல்வி மேலானது என்பதை விளக்கிப் பத்து வரிகள் எழுது.

## 3. விவேக சிந்தாமணி

கற்பகத் தருவைச் சார்ந்த
காகமும் அமுதம் உண்ணும்;
விற்பன விவேகம் உள்ள
வேந்தரைச் சேர்ந்தோர் வாழ்வார்.
இப்புவி தன்னில் என்றும்
இலவுகாத் திடும் கிள்ளைபோல்
அற்பரைச் சேர்ந்தவர் வாழ்தல்
அரிதரி தாகும் அம்மா! (1)

வாழ்வது வந்தபோது
மனந்தனில் மகிழ வேண்டா;
தாழ்வது வந்த தானல்
தளர்வரோ தக்கோர்? மிக்க
ஊழ்வினை வந்த தானல்
ஒருவரால் விலக்கப் போமோ?
ஏழையா யிருந்தோர் பல்லக்கு
ஏறுதல் கண்டி லீரோ? (2)

கலைஎலாம் உணர்ந்தா ரேனும்
கரிசறத் தெளிந்தா ரேனும்
மலைஎன உயர்ந்தா ரேனும்
மனமயல் அகன்ற ரேனும்
உலகெலாம் புகழப் பல்லோர்க்கு
உதவிய கைய ரேனும்
இலகிய இரக்கம் இன்றேல்
எழுநரகு அடைவர் அன்றே. (3)

(1) தரு-மரம். விற்பன விவேகம்-கல்வியறிவு. புவி-பூமி. இலவு காத்திடும் கிள்ளை ஏமாந்துபோகும்.

(2) தக்கோர்-குண நலன்களால் தகுதியுடையோர். ஊழ்வினை-விதி.

(3) கரிசு-குற்றம். மயல்-மயக்கம்.

## பயிற்சி

I. விடை எழுது:

(1) விவேக முள்ளவரைச் சேர்ந்தவர் வாழ்வுக்கும் அற்பரைச் சேர்ந்தவர் வாழ்வுக்கும் உவமைகள் யாவை ?

(2) ஏழையாய் இருந்தோர் பல்லக்கு ஏறுவர்—அதனால் நாம் என்ன செய்யக்கூடாது ?

(3) இரக்கம் இல்லாவிட்டால் என்ன நிகழும்?

II. இப்பாட்டுகளின் கருத்தை உன் சொந்த நடையில் எழுது.

# 4. மூதுரை

நல்லார் ஒருவருக்குச் செய்த உபகாரம்
கல்மேல் எழுத்துப்போல் காணுமே—அல்லாத
ஈரமிலா நெஞ்சத்தார்க்(கு) ஈந்த உபகாரம்
நீர்மேல் எழுத்துக்கு நேர். 1

அட்டாலும் பால்சுவையில் குன்றாது; அளவளாய்
நட்டாலும் நண்பல்லார் நண்பல்லர்;
கெட்டாலும் மேன்மக்கள் மேன்மக்களே ; சங்கு
சுட்டாலும் வெண்மை தரும். 2

அடுத்து முயன்றாலும் ஆகுநாள் அன்றி
எடுத்த கருமங்கள் ஆகா—தொடுத்த
உருவத்தால் நீண்ட உயர்மரங்கள் எல்லாம்
பருவத்தால் அன்றிப் பழா. 3

நல்லாரைக்காண்பதுவும் நன்றே; நலமிக்க
நல்லார்சொல் கேட்பதுவும் நன்றே;—நல்லார்
குணங்கள் உரைப்பதுவும் நன்றே; அவரோடு
இணங்கி யிருப்பதுவும் நன்று. 4

தீயாரைக் காண்பதுவுந் தீதே; திருவற்ற
தீயார்சொல் கேட்பதுவுந் தீதே;—தீயார்
குணங்கள் உரைப்பதுவுந் தீதே; அவரோடு
இணங்கி யிருப்பதுவுந் தீது. 5

மடல்பெரிது தாழை மகிழ்இனிது கந்தம்
உடல்சிறியர் என்றிருக்க வேண்டா;—கடல்பெரிது
மண்ணீரும் ஆகா(து;) அதன்அருகே சிற்றூறல்
உண்ணீரும் ஆகி விடும். 6

— ஔவையார்.

1. ஈரம்-இரக்கம். ஈந்த-செய்த.

2. அட்டாலும்-காய்ச்சினுலும். அளவளாய் - மிகவும் கலந்து. நட்டாலும் - நட்புச் செய் தாலும்.

3. அடுத்து-மீண்டும் மீண்டும். தொடுத்த - நெருங்கியுள்ள. பருவத்தால் - காலத்தால்.

4. நலமிக்க - நன்மை பெருகிய. இணங்கி - சேர்ந்து.

5. திருவற்ற-குண அழகற்ற.

6 தாழை-தாழம்பூ. மகிழ்-மகிழம்பூ. கந்தம்-மணம். மண்ணீர்-கழுவும் நீர்; சிற்றூறல்-சிறிய ஊற்று நீர்.

பயிற்சி

I. விடை எழுது:

1. நல்லவர், கெட்டவர் — இவர்களுக்குச் செய்த உபகாரம் எவ்வாறு இருக்கும்?

2. பால், சங்கு—இவற்ருல் விளக்கப்படும் உண்மைகள் யாவை?

3. பருவ காலத்தில் மரங்கள் பழுப்பது எதற்கு எடுத்துக் காட்டப்பட்டது?

4. நல்லார், தீயார்—இவர்களைப்பற்றி என்ன கூறப்படுகிறது?

5. தாழை, மகிழம்பூ—இவை எடுத்துக் காட் டப்பட்டதேன்?

6. கடல், சிற்றூறல்—இவை எடுத்துக்காட்டப் பட்டதேன்?

# 5. நல்வழி

சாதி இரண்டொழிய வேறில்லை சாற்றுங்கால்
நீதி வழுவா நெறிமுறையின்—மேதினியில்
இட்டார் பெரியோர் இடாதார் இழிகுலத்தோர்
பட்டாங்கில் உள்ள படி. 1

ஆற்றுப் பெருக்கற்று அடிசுடும்அந் நாளுமவ்வாறு
ஊற்றுப் பெருக்கால் உலகூட்டும்—ஏற்றவர்க்கு
நல்ல குடிப்பிறந்தார் நல்கூர்ந்தார் ஆனாலும்
இல்லையென மாட்டார் இசைந்து. 2

ஒருநாள் உணவை ஒழியென்றால் ஒழியாய்
இருநாளுக்கு ஏலென்றால் ஏலாய்—ஒருநாளும்
என்னோ வறியாய் இடும்பைகூர் என்வயிறே!
உன்னோடு வாழ்தல் அரிது. 3

ஆற்றங் கரையின் மரமும் அரசறிய
வீற்றிருந்த வாழ்வும் விழும்அன்றே—ஏற்றம்
உழுதுண்டு வாழ்வதற்கு ஒப்பில்லை கண்டீர்
பழுதுண்டு வேறோர் பணிக்கு. 4

பாடுபட்டுத் தேடிப் பணத்தைப் புதைத்துவைத்துக்
கேடுகெட்ட மானிடரே கேளுங்கள் கூடுவிட்டிங்(கு)
ஆவிதான் போயினபின் யாரே அனுபவிப்பார்
பாவிகாள் அந்தப் பணம்? 5

ஆன முதலில் அதிகஞ் செலவானால்
மானம் இழந்து மதிகெட்டுப்—போனதிசை
எல்லார்க்குங் கள்ளனாய் ஏழ்பிறப்பும் தீயனாய்
நல்லார்க்கும் பொல்லனாம் நாடு. 6

ஒன்றை நினைக்கின் அதுஒழிந்திட்(டு) ஒன்றாகும்
அன்றி அதுவரினும் வந்துஎய்தும்—ஒன்றை
நினையாத முன்வந்து நிற்பினும் நிற்கும்
எனையாளும் ஈசன் செயல். 7

ஆறிடும் மேடும் மடுவும்போ லாஞ்செல்வம்
மாறிடும் ஏறிடும் மாநிலத்தீர்—சோறிடும்
தண்ணீரும் வாரும் தருமமே சார்பாக
உண்ணீர்மை வீறும் உயர்ந்து.

குறிப்புரை

1. சாற்றுங்கால்-சொல்லுமிடத்து. நெறி-வழி. மேதினியில்-உலகில். பட்டாங்கு-நீதி நூல்.

2. அற்று-நீங்கி. உலகூட்டும் - உலகத்தாருக்கு அளிக்கும். ஏற்றவர்க்கு-பிச்சை எடுத்தவர்க்கு. நல்கூர்ந்தார்-ஏழைகள். இசைந்து-மனம் ஒப்பி.

3. ஏல்-ஏற்றுக்கொள். என்னோ-என்னுடைய நோய். இடும்பைகூர்-துன்பம் நிறைந்த.

4. ஏற்றம் - பெருமை. பழுது-சிறுமை. பணிக்கு-வேலைக்கு.

5. கூடுவிட்டு-இந்த உடலை விட்டு.

6. ஆனமுதலில்-கிடைக்கும் வருவாயைவிட. மதி கெட்டு-அறிவு கெட்டு.

7. அது ஒழிந்திட்டு ஒன்றாகும்-அது ஒழிந்து வேறு ஒன்று ஆகும்.

8. மாறிடும் ஏறிடும்-குறைந்துவிடும் உயர்ந்து விடும். மாநிலத்தீர்-உலகத்தாரே. உள்நீர்மை-மனத்தின் தன்மை. வீறும்-வளரும்.

## பயிற்சி

I. விடை எழுது:

1. ஔவையார் கூறும் இரண்டு சாதிகள் எவை ?

2. நல்ல குடியில் பிறந்தவர் ஏழையானாலும் கொடுப்பார் என்பதற்குக் காட்டப்பட்ட உவமானம் எது ?

3. ஆறு வறண்டபோதும் எப்படி உதவுகிறது ?

4. ஏன் வயிற்றோடு வாழ்தல் அரிது என்கிறார் ஔவையார் ?

5. உழவின் சிறப்பு எப்படிக் கூறப்படுகிறது ?

6. ஔவையார் எவரைப் பாவிகள் என்று கூறுகிறார் ?

7. வரவுக்கு மிஞ்சிச் செலவிட்டால் என்ன தீமைகள் உண்டாகும் ?

8. ஈசன் செயல் எது ?

9. செல்வம் எத்தகையது ? அதனால் நாம் என்ன செய்யவேண்டும்?

II. ஔவையாரைப் பற்றி உனக்குத் தெரிந்ததைப் பத்து வரிகளில் எழுது.



# KAMALA VACHAKAM

**STANDARD IV**

*By*

Vidwan, R. VISWANATHAN, M. A., B. O. L.
Pandit, S. MUTHURATNA MUDALIAR

**VIVEKANANDA PUBLISHING HOUSE**
**VIJAYAPURAM :: :: TIRUVARUR Jn.**

Price Annas 0—8—0